

# காஞ்சியில் அத்திகிரி அருளாளர்!

10-8-79 அன்று திருமலையும். காஞ்சி மாநகரம் விழாககோலம பூணடன. நாறபது ஆணடுகளுக்கு ஒருமுறை, ஸ்ரீ வரதராஜ சுவாமி கோயில் அரங்கத்தி லுளள அநனதஸரஸ எனறழைக்கப்படும புஷ்கர ணியில ஒரு அறைககுள் வைக்கபபட்டுள்ள அத்தி மரத்திஞல் ஆன ஸ்ரீ வரதராஜசுவாமி உருவச்சிலையை வெளியிற கொணாந்து பொது மக்கள் வழிபடுவதற் காக கோயிலில ஒரு குறிபபிடட நாடகளுக்கு திருநிலைப்பாடு செய்வா. இவ்வகையில கடந்த நாறபது ஆணடுகளுக்கு பிறகு, 2-7-79 அன்று ஸ்ரீ அத்திகிரி வரதராஜசுவாமி காஞ்சியில் எழுந்தருளிய தை ஒட்டி, நாட்டின், ஏன், அயல் நாட்டிலிருநதும் பல்லாயிரக் கணக்கானப பொது மக்கள காஞ்சிக்கு வருகைபுரிநது சுவாமியைத் தரிசித்தனா. இவ்அரிய நிகழ்ச்சியை ஒடடி, தி. தி. தேவஸ்தானம் 10-8-79 அனறு ரூ. 2,500 பெறுமான 24 முழம் பட்டுத் துப்டா ஒனறும் ரூ. 1,500 பெறுமான 12 முழம சரிகைப் பட்டு உததிரியம் ஒனறும, 18 முழம் அரிய சரிகைப் படடுத்துணி ஒன்றும, தேவஸதானத்தின





சார்பில ஸ்ரீ ஆதி அத்திகிரி வரதருக்குப போர்த்தப் பட்டது. அதறகு முன்னா மேறபடி துணி வகைககள் முறையே ஸ்ரீ வேஙகடேஸ வரருக்கும, பத்மாவதித் தாயாருககும் போாத்தப்படடு, பிறகு அவற்றினே, திருமலை மற்றும திருசசானூரா கோயில் பிராகாரங் களிலும, உள்ளூர் மாட வீதிகளிலும யானை, குதிரை சேத சத்ர மேளதாள வாதய வேதபாராயணத்துடன் தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவா திரு. பி. வி. ஆா. கே. பிரஸாத அவாகளின் தலைமையில் திருவீதி வலம செய்வித்த பிறகு, அவை 10-8-79 அன்று மாலை 5 மணி அளவில காஞ்சிக்குக கொண்டு வரபபடடன. அன்று மாலை காஞ்சியின நெடுஞ் சாலையின இருமருஙகும பக்தாகள ஆயிரக்கணக்கில் கூடியிருந்து, காளிதாஸன் 'நகரேஷுகாஞ்சி' எனறு அன்று கூறியது போனறு, காஞ்சி வரலாறு காணா வண்ணம் விழாப் பொலிவுடன் விளங்கியது. மேலும் வரதராஜ சுவாமி கோயில் சன்னதியில் மேற்படி வஸ்தரஙகளின திருவீதிவலம் தொடங்கிய சமயத்து, கோயிலின விசேஷமான வெடி முழக்கம் வானைப் பிளந்தது. பிறகு அஹோபில மடத்திலிருந்து வந்த





நாஞ திக்குல நரு லெல்லா
வானல லோனனே வத்துருகதலி (பல்லவி)

சதுலு சுதுலு பரிஸருலு பாந்தவுலு
ஹிதுலு கொலுவுக நிந்தருனு
சதசகஸ்ர யோஜன வாஸலு சு
விரதமுல தோடனே வத்தரு கதலி (நாஞ)

முடுபுலு ஜாள்ளலு மொகி தலமூட்டலு
கடலேனி தனமு காந்தலுனு
கடுமஞ்சி மனுலு கருலு துரகமுலு
வடிகுனி செலகுஜு வத்தரு கதலி (நாஞ)

மகுட வர்த்தனலு மண்டேஸ்வரடு
ஜக தேக பதுலு செதருலுனு
தகு வேங்கடபதி தருசிம்பக பஹீ
வகல சம்பதல வத்தரு கதலி.

*நான்கு திசைகளிலிருந்து மக்கள் மழையில் நனைந்து கொண்டு புறப்பட்டு வருவர்.*

*மனைவிமார், பிள்ளைகள், உற்றார் உறவினர், நண்பர்கள் ஆகியோா புடைசூழ இறைவனைத்தரிசிக்க நூற்றுககணக்கில் ஆயிரக்கணக்கில் பத்துக கல் தொலைவிலிருந்து நியமத்துடன் புறப்பட்டு வருவா.*

*வேண்டுதல் முடிச்சுகள், கைப்பைகள், தலையில் மூட்டைகள் ஆகிய வற்றுடன், அளவில்லா பொருளுடனும், பெண்களுடனும, ரத்தினம போன்ற உயர் கல்வகைகளுடனும், யானைகளும் குதிரைகளும் உடன்வர களிப்புடன் வரிசையாக புறப்பட்டு வருவர்.*

*அறிஞர்களாகிய, தலையில் மகுடம் தரித்த அரசர்களும், சிற்றரசர் களும், சக்கரவர்த்திகளும் நம் வேங்கடவனைத் தரிசிக்க பலவகையான ஐஸ்வர்யங்களுடன் புறப்பட்டு வருவர்.*

***அன்னமாச்சார்யா கீர்த்தனைகள்-தொகுதி XI பகுதி-3 எண்-134.***



தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ. 6



முழு விவரங்களுக்கு,
EDITOR
'Sapthagiri'
T. T. D. Press Compound
TIRUPATI-51750.




# ஸப்தகிரி

செப்டம்பர் 1979

மலர் 10
இதழ் 4

## உள்ளுறை

பக்கம்



அட்டை படம் : மலையப்பெருமாள்



# ஆசிரியர் உரை

மனிதனை மனிதனாக வாழச் செய்யும் வகையில், அவனுள்ளத்தில் உயர்ந்த-தெய்வீகப்-பண்புகளை ஊட்டி வளர்ப்பது அவன் சார்ந்துள்ள சமயமாகும். மனிதன் இச்சமுதாயததில் ஓர் அங்கமாக விளங்குவதால், அவனுடைய ஒழுகலாறுகளைப் பொறுததே அசசமுதாயமும் இயங்கும. ஆகவேதான பாரதப் பூமியில் சமயமும் சமுதாயமும் பின்னிப் பிணைந்து நிற்க, அப்பிணைப்பே ஒரு கலாசசாரமாக விளங்குகிறது. பாரதம், இந்து சமயத்தை தழுவியிருந்தாலும், அது தன்னகத்தே அன்றே பல சமய உட்பிரிவுகளைக் கொண்டு விளங்கியது. எனினும் பிற சமயக் காழ்ப்புணர்ச்சி அன்று நிலவியதில்லை. மாறாக பிற சமயங்கள் வளர்ந்திட வழி வகுத்தது. ஒரு வேளை சமயக் கருத்து வேறுபாடுகள் இருந்திருந்தாலும, அவற்றினை அவர்கள் தங்கள் சமயப் பெருமையாகக் கொண்டார்கள் தவிர, அதனால் பகை கொண்டு பிற சமயததை அழிக்க முனைந்திட்டார் அல்லர். எனினும் "ஒன்றே குலம் ஒருவனே தேவன" எனும பெருமைக்குரிய பண்பு ஒவ்வொரு உள்ளததிலும் ஊன்றிடவே, அன்றே நம் முன்னோர்கள், எல்லோரும் ஒன்று கூடி அவர்களிடையே சமய ஒருமைப்பாட்டுணர்ச்சித் தழைததோங்கிடும வகையில், எங்கும், எப்போதும் ஆன்மிகச் சூழ்நிலை விளங்கிடும் அவசியத்தை மனதிற் கொண்டு, சமதர்ம சமுதாயததினை ஏற்படுத்திடவே பல புராணக்கதைகளின் பின்னணியில் இயற்கைக்கு விழா எடுத்தனர் நமது ஆன்றோர். மலை முதல் அணுவரை உள்ள எல்லாப் பொருட்களிலும் அப்பரமனைக் காணும் இந்தியர்கள், இயறகையின் தலைமகளான புனலிடமும் இறைவனைக் கண்டனர். இதற்குச் சான்றாக 12 வருடங்களுக்கு ஒருமுறை நடைபெறும் 'கோதவரி புஷ்கரம்" எனும் விழா விளங்குகிறது.

புஷ்கரத்திற்கும் நதிக்கும் என்ன சம்பந்தம்? பிரகஸ்பதி எனும் தேவகுரு ஒவவொரு ராசியிலும் ஒரு வருடம இருந்து, மறுபடியும் புறப்பட்ட ராசிக்கு வருதற்கு 12 ஆண்டுகள் ஆகின்றன. இதனையே புஷ்கரம என்றழைக்கின்றனர். ஒவ்வொரு ராசியிலும் குரு சஞ்சரிக்குமபோது, 12 ராசிகளுக்கு 12 ஜீவ நதிகளை வைதது, இதுபோது அந்நதிகளில் மூழ்கி எழுவது, நதிக்கரைகளில் தக்க வைதிக சடங்குகளை மேற்கொள்வது யாவும், நமக்கு இம்மை மறுமை இனபங்களை வழங்கும். எனறும், நம் முதாதையினரின் அருள் நமக்குக கிட்டும் என்றும் நமது சமயம் கூறுகினறது. நீரைக் கொடுக்கும் தெய்வமான ரவியும், தேவகுருவான பிரகஸ்பதியும் ஒன்று சேர்ந்து சிம்ம ராசியில் இருக்கும முதல் 12 நாட்கள் விசேஷமாகக் கருதப்பட்டு, அவை, கோதாவரி நதிக்கான விழா நாட்களாகக் கொணடாடப்படுகினறது.

கௌதம மாமுனிவர் ஒரு பசுவைக் கொனறதால் தனக்கு நேர்ந்த பாவத்தைப் போக்கிக கொள்ள, விண்ணுலகிலிருந்து வந்த மந்தாகிணி எனும் நீரில் குளிததார் என்றும், அந்நீரே பின்னர் கோதாவரி என்று பூவுலகில் அழைக்கப்பட்டது என்றும் புராணம் கூறும மகாராஷ்டிரத்தில் நாசிக்கில் பிறந்து ஐந்து மாநிலங்களைப் புனிதமாக்கிக் கொண்டு, ஆந்திர மாநிலததில் பாபி கொண்டலு அருகில் கடலில் கலக்கிறது. இத்தகு பெருமை மிகு கோதாவரி நதி, இவ்விழா நாட்களின்போது புதுப்புனலுடன புதுப்பொலிவுடன் சீறிப்பாய்ந்தோடும, இதுபோது, இக்கோதாவரி நதிக்கரை, 27-8-79 முதல் 9-9-79 வரை, நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து சமயப்பிரிவின்றி வரும் இலட்சக்கணக்கான யாததிரிகர்களுடன் ஆனமிகச் சிந்தனை எங்கும பரந்து விளங்கிடும் வகையில் விளங்கும். இத்தருணத்தினை ஓர் அரிய வாய்ப்பாகக கொண்டு பல்வேறுபட்ட சமய நிறுவனங்கள், இங்கு சமய நிகழ்ச்சிகள் பல நடத்தி யாத்திரிகர்களை பக்தி வெள்ளத்தில் திளைக்கச் செய்யும்.

இவ்வகையில் தி. தி. தேவஸ்தானம் இவ்விழாவில் முழு அளவில் பங்கேற்றுள்ளது. முதற் பணியாக ராஜமண்ட்ரியில் கோதாவரி நதிக்கரையில் 'குளிக்கும் படித்துறை' ஒனறினை தன முழுச் செலவில் கட்டியுள்ளது. மேலும் தங்களுடைய ஏழ்மை நிலைக் காரணத்தாலும், உடல் நலக் குறைவாலும், மற்றும் வேறு பல காரணங்கள் முன்னிட்டும் திருமலைக்கு வருகை புரிந்து ஸ்ரீ வேங்கடேஸ்வரரை தரிசிக்க முடியாதவர்களுக்கு பெரும் பயன் விளைவிக்கும் வகையில் தி. தி. தேவஸதானம் இங்கு சுப்ரமண்யத் திடலில் ஒரு சிறிய மாதிரி வேங்கடேஸ்வரர் ஆலயத்தை கட்டியுள்ளது தி. தி. தேவஸ்தானத்தாரின் இந்து தர்ம பிரதிஷ்டானத்தின் ஆதரவில் இவ்விழா நாட்களின்போது காலை முதல் மாலை வரை சமயம் சம்மந்தப்பட்ட நிகழ்ச்சிகள் நடைபெறுகினறன. சாமானியருக்கும் எளிதில் மலிவான விலையில் சமய நூல்கள் கிடைக்கச் செய்து, நமது புராண, இதிகாச, சமயக் கருத்துக்களின் அடிப்படைத் தத்துவத்தின சிறப்பினை அவன் உணரும வகையில் தி. தி. தேவஸ்தானம் தன் நூல் வெளியீடுகளைக் கொண்ட ஒரு விற்பனை நிலையத்தினை செயற்படுத்தியுள்ளது.

மானிடன் உயர் வாழ்வு பெற்றிட தன்னால் இயன்ற சமயத் தொண்டினை ஆற்றிட ஒரு வாய்ப்பினை, இது போன்ற தேசீய புனல் விழாக்கள்மூலம், ஏற்படுத்திக் கொடுத்த நம் முன்னோர்களுக்கு தி. தி. தேவஸ்தானம் தன் புகழ் அஞ்சலியை தெரிவித்துக் கொள்கின்றது. அதே தருணத்து நம் உள்ளம் மற்றும் உடல் மாசினை அகற்றி, வாழ்க்கையின் ஜீவநாடியாக விளங்கும நதிகளுக்கு, இக்கோதாவரியினை வணங்குவதின்மூலம் நம் நனறியை தெரிவித்துக் கொள்வோமாக. நம் முன்னோர்கள் கொணட பரந்த மனப்பானமையில், உயர்ந்த எண்ணங்களில் நூற்றில் ஒரு பங்கையாவது நாம் நம் மனதில் வளர்த்துக் கொண்டால் அதுவே நாம் அவர்களுக்கு செய்யும் நினைவஞ்சலியாக அமையும். இதுவே நம் வாழவினை பண்படுத்தப்படும்

# தி. தி. தேவஸ்தான மேலாண்மைக்குழு முடிவுகள்

(திருமலையில் 3-8-79 அன்று நடைபெற்ற குழுக் கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு)

நான்கு புதிய உதவி ஸதபதிகளை நியமிப்பதற்கு குழு அனுமதி அளித்துள்ளது.

திருப்பதியிலுள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா ஏழை இல்லத்தில் பணிபுரியும் மருத்துவர்களுக்கு சிறப்பு ஊதியம் அளிப்பதற்கு குழு அனுமதி அளித்துள்ளது.

தி. தி. தேவஸ்தானத்தாரின் "ஸ்ரீ வேங்கடேஸ்வர வைபவம்'' எனும் திரைப்படத்தினை, ஆந்திர அரசு பொதுத்தகவல் மற்றும் பொதுஜனத் தொடர்பு இயக்குநரின் உதவியுடன் அவர்களுடைய துறை வெளியீடாக திரையிடுவதென்றும், அதனால் வரும் லாபத்தினை சரிசமமாக பங்கு கொள்வதென்றும் குழு தீர்மானித்துள்ளது.

திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் முக்கிய விருந்தினர் விடுதிக்கான சோஃபா உறைகள் மற்றும் ஒப்பனை மேசைகள் வாங்குவதற்குக் குழு ரூ. 11,700 ஒதுக்க தீர்மானித்துள்ளது.

சித்தூர் மாவட்டம் ஸ்ரீவாரிமெட்டுரில் இருக்கும் ஸ்ரீவாரிமெட்டு சாலையில் உள்ள 'ஷெல்டர் மண்டபத்திற்கு' அருகே பாலம் ஒன்றினைக் கட்ட குழு அனுமதி அளித்துள்ளது.

அவந்திபுரத்திலுள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வராசுவாமி கோயிலுக்குத் தெய்வ உருவச்சிலைகளை வழங்க குழு அனுமதி அளித்துள்ளது.

நெல்லூர் நகரிலுள்ள நவாப் பேட்டையில் அமைந்துள்ள ஸ்ரீஉடையவர் சன்னதிக்காக ஒலிப்பெருக்கிச் சாதனங்களை வழங்க குழு தீர்மானித்துள்ளது.

1-6-79 முதல் 31-8-79 வரை திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில்உண்டியில் காணிக்கையாகச் செலுத்தப்பட்ட வெள்ளி, செப்பு, மற்றும் வெண்கலப் பொருட்களையும்,கைக்கடியாரங்கள், எழுதுகோல்கள், துணி வகைகள் மற்றும் பல்வேறுவகைகளான பொருட்களையும் பொதுமக்கள் ஏலம் மூலமாக விற்பதற்கு குழு அனுமதி அளித்துள்ளது. ஏலம் விடும் தேதியும், இடமும் பின்னர் முடிவு செய்யப்படும்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி மடத்தைச் சார்ந்த ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்யா அவர்கள் கேட்டுக் கொண்டதன் பேரில், ஹைதராபாத்தில் நடைபெறவிருக்கும் வேத ஞான பரிஷத், வேத பாஷ்ய சதஸ், ஹூதி தாக்னி சதஸ் ஆகியவற்றிற்கு உதவும் வகையில் ரூ. 30,000 வழங்க குழு முடிவு செய்துள்ளது.

சென்னை, பெங்களூர், ஹைதராபாத் ஆகிய தலைநகரங்களில் உள்ள தி. தி. தேவஸ்தான தகவலறிவிப்பு நிலையங்களில் வாரத்திற்கு ஒருமுறை திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் பிரஸாதங்களான லட்டு, வடை, கற்கண்டு முதலியவற்றை பக்தர்களுக்கு விற்பதென்று குழு தீர்மானித்துள்ளது.

ஆந்திரா, தமிழநாடு, கர்னடகம் ஆகிய மாநிலங்களில் உள்ள சிறைச்சாலைகளில் தூக்கிலிடப்படும் கைதிகளுக்கு, தூக்கிலிடப்படுதற்கு இரண்டு நாட்கள் முன்பு, திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் பிரஸாதங்களான இரண்டு லட்டுகள், ஒரு வடை கொண்ட பொட்டலம் ஒன்றும், கற்கண்டு பொட்டலம் ஒன்றும், மகா பிரஸாதப் பொட்டலம் ஒன்றும் வழங்குவதென்று குழு தீர்மானித்துள்ளது. இவை நேரிடையாக கைதிகளுக்கு வழங்கப்படும். மேலும் தேவஸ்தான ஊழியர்கள் இருக்கும் இடங்களில் உள்ள மருத்துவமனைகளில் உள்ள தீராத நோயவாய்ப்பட்ட நோயாளிகளுக்கு ஒருமகாபிரஸாதப் பொட்டலம் ஒன்றும வழங்குவதென்றும் குழு தீர்மானித்துள்ளது.

நாற்பது ஆண்டுகளுக்கொருமுறை வெளிக்கொணரப்பட்டு வழிபடப்பட்டுவரும் காஞ்சி ஸ்ரீ அத்தி வரத ராஜசுவாமிக்கென்று, தி.தி. தேவஸ்தானத்தாரின் துப்பட்டா(பொன்னுடை) ஒன்றினை வழங்க குழு இசைந்துள்ளது. [இப்பொன்னுடை 10-8-79 அன்று மேற்படி சுவாமிக்கு அணிவிக்கப்பட்டது.]

திருப்பதியிலும, திருமலையிலும் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் மருத்துவ நிலையங்கள், முதலுதவி நிலையங்கள், தி. தி. தேவஸ்தானத்தாரின் ஊழியர்கள், மற்றும் திருமலைக்கு வரும் யாத்திரிகர்களுக்குத் தேவையான மருத்துவ வசதிகள் ஆகியவற்றை மனதிற்கொண்டு சீரான ஒரு மருத்துவ துறையினை அமைப்பதற்கு முன்னாள் மருத்துவத் துறை இயக்குநர் டாக்டர். மாத்தூர் அவர்களின் உதவியைக் கோருவதென குழு தீர்மானித்துள்ளது.

ஓய்வுபெற்ற தி. தி. தேவஸ்தான ஊழியர்கள் இறந்து விடின், அவர்களுக்கான இறுதிக்கடன் பணிகளுக்கென ரூ. 150 வழங்க குழு முடிவு செய்துள்ளது.

திருப்பதியிலுள்ள சிறப்புக்கலைப் பள்ளி மாணவர்களுக்கும் மற்றும் ஸ்ரீ வேங்கடேஸ்வரா கீழ்த்திசைக் கலலூரியில் பயிலும் மாணவர்களுக்கும, அவர்களுக்கென்று வழங்கப்படும உதவித் தொகையினை உயர்த்துவதைக் காட்டிலும், அவர்களுக்கு இலவச படிப்பு மட்டுமின்றி இலவச உணவு மற்றும தங்கும வசதி அளிப்பதென்றும், மேலும் அம் மாணவர்களிடமிருந்து சிறப்புத் தொகை அல்லது எந்தவிதமான தொகையும் வசூலிக்கப்படக் கூடாது என்றும் குழு தீர்மாமானித்துள்ளது.

இனிமேற் கொண்டு தி. தி. தேவஸ்தான நிதியில், விளையாட்டுப் போட்டிகளை நடத்துதல் கூடாது என்று குழு தீர்மானித்துள்ளது.

திருப்பதியிலுள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகம் தன்னுடைய வெள்ளி விழாவினை இவ்வாண்டு செப்டம்பர் மாதம் கொண்டாட உள்ளது. இதனையொட்டி, தி. தி. தேவஸ்தானம் தன் பங்காக ரூ. 30 இலட்சத்தை வங்கியில் முதலீடாகப் போட்டு, அதனாற்றான் ஒவ்வொரு வருடமும் வரும் வட்டித் தொகையான ரூ.3 இலட்சத்தினை, (பண்டைய வரலாறு, கலாச்சாரம, தொல் பொருள் ஆராய்ச்சி பற்றிய துறை ஒன்றும, தத்துவத்துறையில் "ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலவி'' எனும தலைப்பில் ஒரு பகுதியை ஆரம்பிக்கவும், நுண்கலைத் துறையில் "அன்னமாச்சார்யா சங்கீர்த்தனைகள்'' சம்பந்தப்பட்ட உயர் விரியுரையாளர் பதவியை ஏற்படுத்தவும், கீழத்திசை ஆராய்ச்சி நிறுவனத்தில் 'கல்வெட்டு' சம்பந்தப்பட்ட சான்றிதழ்ப படிப்பினை துவக்கவும்) அப்பல்கலைக் கழகத்திற்கு வழங்க குழு தீர்மானித்துள்ளது.

★

# விநாயகர் உருவங்களும் வழிபாடும்

நம நாட்டில் விநாயகர் வழிபாடு பல காலமாக இருநது வருகின்றது. இமயம் முதல குமரி வரை அவரை முதற் கடவுளாக வணஙகி வருகின்றார்கள். மேலும் வெளி நாடுகளான நேபாளம், திபேத், சீனா, ஜபபான், பர்மா, ஸ்ரீலஙகா முதலிய நாடுகளில் கூட விநாயகரை வணங்கி வருவதாகக் கூறுகின்றனர். சைவர்கள், வைணவர்கள், பௌத்தர்கள் ஜைனர்கள் யாவரும் கணேசரை துதிக்கின்றனர். வைணவர் கோவில்



களில் கூட கணேசர் விஷ்வக்சேனா சேனை முதலியார் என்று வழங்கப்படுகின்றார். நாம் எந்தக் காரியத்தை எடுத்தாலும் விநாயகரை தொழுது ஆரம்பிப்பது நமது மரபு. நம் நாட்டில் விநாயகருக்கு ஆயிரக்கணக்கான கோவில்கள் உள்ளன. கணபதி பெயரால் பல ஊர்கள் உள்ளன. கணேசபுரம், கணேசசுரம், கணபதி நலலூர், கணபதி அக்ரஹாரம், பிள்ளையார்பட்டி, பிள்ளையார் பாளையம் முதலியன பிரசித்தமானவை.

பணடைக்கால மன்னாகள விநாயகரை தம கண கணட தெயவமாக போற்றி வந்தார்கள. அதனால் அவர்கள் கணபதிக்கு கற்கோவில்கள கட்டினாகள. பலவிதமான விநாயகர் உருவங்களை நாம் கோவில்களில் காணலாம.

முதன் முதலாக விநாயகருக்கு முக்யத்வம் கொடுத்த இடம் வாதாபி சிற்பங்கள். பலலவர்கள் இப்பணியை செய்தார்கள. நரசிம்மவர்மன என்னும் அரசன் தென்னாட்டில் பல கோவில்கள் கட்டினான். அவனுடைய தளபதியாக இருநத பரஞ்சோதியார் முதன் முதலாக விநாயகா சிலையை கொண்டு வந்தார். பல்லவ மன்னன் மாமல்ல புரத்தில் பல சிற்பங்களை செதுக்கினான். திருச்சி மலைக் கோட்டை கீழ குகையில விநாயகர் உருவம் உள்ளது. இவரே தமிழ் நாட்டின் முதல் விநாயகர். சாளுக்கியர்கள் கணபதியை வணங்கி வந்தார்கள. முதலாம் மகேந்திரன் கோவில்களில் கணபதி உருவம் இல்லை. மாமல்லபுரத்து ரதங்களில் கணபதி உருவம் இல்லை. காஞ்சீபுரம் கைலாசநாதர் கோவிலில் கணேசர் சிலை உள்ளது. மாதங்கேசுவரா கோவிலிலும கணேசர் உருவம் உள்ளது. திருத்தணியிலுள்ள வீரட்டேசுவரர் கோவிலில் கணேசர் சிலையைக் காணலாம். பல்லவர் காலத்தில் விநாயகர் படிப்படியாக முன்னேற்றம் கொண்டுள்ளாா. சிற்பத்தில் பாண்டிய மன்னர்களின் கோவில்களிலும் குகைகளிலும் விநாயகர் உருவத்தை காண்கிறோம் திருகோகர்ணம் மலையக் கோவில், குன்றாண்டார் கோயில், திருவெள்ளறை முதலிய இடங்களில் விநாயகர் உருவம் காணப்படுகின்றன. பாண்டிய நாட்டில் உள்ள குறைக்குடி பிள்ளையார் பட்டி திருப்பரங்குனறம், செவிலிப்பட்டி, திருமலாபுரம், ஆகிய இடங்களில் விநாயகா சிலைகள அழகாக அமைந்துள்ளன. குடுமியாமலை தேவாமலையிலும கணேசா உருவங்கள் உள்ளன. இவை எல்லாம் 8-ம் நூற்றாண்டில் முததரையர்களால் உருவாக்கப்பட்டவை

சோழர்களும விநாயகருக்குச் சிலை எடுத்தனர். நார்த்தாமலையில் முற்கால சோழர் கற்றளிகளில் விநாயகர் உருவம், விமானத்தை அலங்கரித்துள்ளது. பிறகு தென்னாட்டுக் கோவில்களில் வனப்புமிக்க உருவங்களை செதுக்கினார்கள். கும்பகோணம் நாகேசுவரர் கோவில், கணடியூர் கோவில், புன்ன மஙகை கோவில், காஞ்சீபுரம் சொககீசர் கோவில் ஆகிய இடங்களில் உள்ள விநாயகர் உருவங்கள் சோழர் காலத்தவை.

---

**என். ராமகிருஷ்ணா - மாயூரம்.**

---

தஞ்சை பெரிய கோவிலில் ஓர் அழகான விநாயகர் உருவம் உள்ளது. ராஜராஜன் காலத்து சிற்பங்களில் விநாயகர் அழகாக காணப்படுகின்றார். ராஜேநதிர சோழன் கட்டிய கங்கை கொண்ட சோழபுரத்தில் நர்த்தன கணபதி உருவம் உள்ளது. தாராசுரத்தில் தாண்டவ கணபதி உள்ளது. இவை எல்லாம் சோழா காலக் கலைத்திறனுக்கு எடுத்துக் காட்டு.

பிற்கால சோழர்கள் விநாயகா உருவத்தை தெற்கு தேவ கோஷ்டத்தில் வைத்து கட்டினார்கள. அதற்கு பின்தான் விநாயகர் வழிபாடு சிறப்பு பெற்றது. மக்கள் விநாயகா உருவத்தை நாடெங்கும் பூஜை செய்ய ஆரம்பித்தனர். குளக்கரைகளில் கல்வடிவில் விநாயகர் ஸ்தாபிக்கப்பட்டார். பின்பு ஊருக்கு ஒரு விநாயகர் கோவில் ஏற்படுத்தப் பட்டது.

ஹொய்சாளர்கள் கர்னாடகத்தில் கோவில் கட்டி அதில் விநாயகர் உருவத்தை படைத்தார்கள். ஹளேபீடு, பேலூர், சோமநாதபுரம், முதலிய இடங்களில் அற்புதமான வேலைப் பாடுகொண்ட விநாயகர்உருவத்தைக் காணலாம்.

விஜயநகர அரசர்களும நாயக்க மன்னர்களும் விநாயகருககுப்பலசிலை கள் எடுத்தனா. பிரம்மாண்டமான கோவில் கோபுரங்கள் கட்டினாலும் விநாயகர் உருவத்திற்கே சிறப்பிடம் கொடுத்தாாகள். இவ்விதமாக பணைட மன்னர்கள் விநாயகரிடம் பக்தியுடன் ஆணடாார்கள்.

தென்னாட்டில் வரலாறு படைத்த விநாயகர் கோவில்களும் சிலைகளும் உள்ளன. திருவெண்ணை நல்லூரில் பொல்லாப் பிள்ளையார் அற்புதங்கள் செய்தார். திருநாரையூர் பொல் லாப்பிள்ளையார் சக்தி படைத்தவா சிதம்பரம் கோவிலில் பிரம்மாணட மான விநாயகர் உருவம் உள்ளது. மதுரை கோவிலில் முக்குருனர் பிள்ளையாா கம்பீரமாக உள்ளார். மாயூரம் கோவிலில் பெரிய பிள்ளை யாா உருவங்கள் உள்ளன. பெங் களூர் தொட்ட கணபதி மிகப் பெரிய உருவம்.

சில விநாயகர் உருவங்கள பெண் உருவிலும் புலிப்பாதங்களுடனும காணப்படுகின்றன. விக்நேசுவர் என்றும், வியாக்ர சக்தி விநாயகர் என்றும் பெயர் பெற்றுள்ளனர் பவானி கோவிலில் மேல் தளத்தில் வீணை ஏந்திய விநாயகர் உளளார். நாகைப்பட்டணத்தில் பஞசமுக விநாயகர் உருவம் உள்ளது. ஆவுடை யார் கோவிலில் உச்சிஷ்ட்ட கணபதி உருவம் உள்ளது. தஞ்சை ஸ்ரீநிவாச புரததில் சக்தி கணபதிக்கு தனிக கோவில் உள்ளது. ஷோடச கணபதி என்று 16 விதமான உருவங்களை கோவில்களில் காணலாம். எந்தக் கோவிலுக்குச் சென்றாலும் நாம் முதலில் வணங்குவது விநாயகரைத் தான். அப்போதுதான் எந்தக் காரியமும் விக்னமில்லாமல் நடக் கும். ஒவ்வொரு ஆணடும் விநாயகர் விழாவின்போது, கணேசர் வழிபாடு சிறப்பாக நடக்கும். சந்தனகாப்பு அலங்காரமும் கொழுக்கட்டை நிவே தனம் ஆயிரக் கணக்கிலும் நடை பெறும். விநாயகர் பொம்மை செய பவர்கள் பலவிதமான உருவங்கள் செய்வார்கள்.

தமிழ்நாட்டில் அல்லாமல் மகா ாாஷ்ட்ரத்திலும், ஆந்திராவிலும் கர்னாடகத்திலும் விநாயக வழிபாடு சிறப்பாக நடைபெறும். பம்பாயில் பெரிய விநாயகர் உருவங்களை நூறு ரூபாய் கொடுத்து வாங்கி கடலில் விடுவார்கள். இந்து சமய ஒருமைப் பாட்டிற்கு வழி வகுக்கும் இவ்விநா யக வழி பாட்டில் நாமும் பங்கேற்று, அவரது அருளுக்கு பாத்திரமாவோ மாக. 

# அறிவின் வேட்பு

"ஆலம்"

(தேவர்கள் வேறு, அசுரர்கள் வேறு என்னும் கருத்து ஒன்று இருந்து வருவது நமக்குத் தெரிந்ததே. ஆனுல், வெளி உருவமோ வடிவமோ அவர்களை வேறுபடுத்திப் பிரித்துக் காட்டுவதில்லை; எக்காலத்தும் மெய்யாகவிருக்கும வாழ்வின் உண்மைகளைப் பற்றி அவரவருக்குள்ள அகப்பான்மையே அவர் தேவரா அசுரரா என்பதை அறுதிப் படுத்துகிறது என்பதே கற்றுணர்ந்தோரின் முடிவாகும். மெய்யறிவின் உண்மைத்தன்மையை அறிந்துணர்வதில் எத்துணை கவனம் வேண்டும் என்பதை உருவக முறையில் பாங்குற விளக்கும் அறிவார்ந்த உபநிஷதக்கதை, இந்திரன் - விரோசனன் கதை).

"ஆன்மா தீமையற்றது. அதற்கு மூப்போ இறப்போ அல்லது வேறு எந்த வகைத்துயரோ கிடையாது. பசியும் தாகமும் அதனை வருத்துவதில்லை. உண்மையை மட்டும் விரும்பும் அது உண்மையை உணர்வதில் உறுதியாயுள்ளது. இந்த ஆன்மாவையே நாடி, நாம் அதன் மெய்யியல்பை அறிந்து கொள்ளவேண டும். ஆன்மாவின் இந்த உண்மைத் தன்மையை தெளிந்துணர்ந்தவனுக்கு அகில உலகுகளும் கிட்டுகின்றன. அவனுடைய ஆசைகள் அனைத்தும் நிறைவு பெறுகின்றன" என்று படைப்புக் கடவுளான பிரஜாபதி ஒரு சமயம் கூறினுர்.

தேவர்கள், அசுரர்கள் இருவருககுமே இவ்விவரம் தெரிய வந்தது. அகில உலகுகளையும் அளிக்கவல்லதும் அனைத்து ஆசைகளையும் நிறைவேற்றி வைக்கவல்லதுமான இந்த ஆன்ம அறிவை நாடிப் பெறவேண்டும் என்று அவர்கள் தீர்மானித்தனர். தேவர்களுக்குப் பிரதிநிதியாக இந்திரனும் அசுரர்களுக்குப் பிரதிநிதியாக விரோசனனும் சமித்துடன் பிரஜாபதியிடம் வந்தனர். பணிவையும் மாணவராயிருப்பதற் கான விருப்பத்தையும் குறிப்பது சமித்து.

வணங்கி நின்ற அவர்களை நோக்கி "எதற்காக வந்தீர்கள்?" என்று பிரஜாபதி வினவினுர்.

"ஆன்மாவைப்பற்றிய உண்மையைத் தங்களிடமே அறிந்து கொள்வதற்காக வந்திருக்கிறேம்" என்று அடக்கத்துடன் அவர்கள் கூறினர்.

முப்பத்திரண்டு ஆண்டுகள் தம்முடன் தங்கியிருக்குமாறு பிரஜாபதி அவர்களிடம் சொன்னுர். புலனடக்கத்துடன் கூடிய நெறியான வாழ்க்கை முறையினுல் உண்மையை அறிநது கொள்ளும் ஆற்றல் அதிகரிக்கிறது. எனவேதான், பிரஜாபதி அவ்விருவரிடமும் அங்ஙனம் கூறினுர். அவர்களும் அவருடைய ஆணையின்படி பிரம்மசரியத்துக்குரிய ஒழுக்கத்துடன் இருந்து வந்தனர். அவர்களுடைய உறுதியும் ஆர்வமும் பிரஜாபதியைக் கவாந்தன. அவர் "கண்ணின் பார்வையில் நீங்கள் காண்பதே ஆன்மா. இது இறப்பு இல்லாதது, அச்சமற்றது. இதுவே பிரம்மம். நீரிலும் கண்ணுடியிலும் தெரிவதும் இதுவே. அவை இரண்டிலும் பார்த்து நீங்கள் காண்பதைச் சொல்லுங்கள்" என்று மொழிந்தார்.

மறுநாள் அவர்கள் பிரஜாபதியிடம் சென்றபோது அவர் "நீங்கள் என்ன பார்த்தீர்கள்?" என்று கேட்டார்.

"ஐயா, அவற்றில் எங்களையே கண்டோம். எங்கள் உடம்பைத் தலையிலிருந்து கால்வரை அப்படியே பார்த்தோம்" என்று மறுமொழியளித்தனர்.

அப்போது பிரஜாபதி "நன்ருக மழித்துக் கொண்டு ஆடையணிகளை அணிந்துகொண்டு பார்க்கவும். நீங்கள் என்ன பார்த்தீகள் என்பதை மீண்டும் என்னிடம் வந்து சொல்லுங்கள்" என்ருர்.

அடுத்த நாள் அவர்கள் இருவரும் பிரஜாபதியிடம் வந்து "நாங்கள் நன்கு முடிகள் களைந்தவர்களாகவும் ஆடையணிகளை அணிந்து கொண்டவர்களாகவும் இருப்பதையே கண்டோம்" எனப் புகன்றனர்.

"அச்சமற்றதும் அழிவில்லாததுமான அதுவே ஆன்மா; அதுவே பிரம்மம்" என்ருர் பிரஜாபதி.

பிரதி பிம்பமே ஆன்மா என நம்பிய அவர்கள் பிரஜாபதியிடம் வேறு கேள்வி எதையும் கேட்கவில்லை. அவ்விளக்கத்திஞல் முழுவதும் திருப்தியடைந்தவர்களைப் போன்று காணப்பட்ட இந்திரனும் விரோசனனும் அவரை வணங்கி, தத்தம் வழியே சென்றனர்.

ஆனுல், பிரஜாபதியோ "உண்மையான ஆன்மசொரூபத்தைத் தெரிந்து கொள்ளாமல், மெய்யறிவைப் பெறுமலேயே இவர்கள் செல்கின்றனர். மெய்ப்பொருளின் பிரதிபிம்பத்தை மட்டுமே அறிந்து கொள்வதுடன் ஒருவர் திருப்தியடைந்து விட்டால், அவர் தேவராஞலும் சரி, அசுரராஞலும் சரி அவர் அழிவது நிச்சயம்" எனத் தமக்குள்ளேயே நினைத்துக்கொண்டார். ஐயப்பாடுகளை மாணவர்களே உணர்ந்து அவற்றை விளக்கும்படி கேட்கவேண்டும் என்பது உணமையான கல்வி முறையின் அம்சமாகும் அல்லவா?

விரோசனன் அசுரர்களிடம் சென்று, தான் அறிந்து கொண்டதை அவர்களிடம் சொன்னுன். அவர்களும் அதுவே அறுதியான உண்மை என்று எண்ணினர். "இந்த உடம்பே மெய். இதைப் போற்றிப் பாது காத்துக் கொண்டால் போதும்;

இம்மை, மறுமை இரண்டிலும் நலம் பெறலாம்'' என்று நினைத்த அவர்கள் உடலைப் பேணுவதில மட்டுமே அக்கறை காட்டினர். உடம்பே ஆன்மா என்று இன்றும் நம்புகிறவர்கள் அத்தகையவரே. சாவிற்குப் பிறகும் கூட அவர்கள் உடலை அலங்கரிக்கின்றனர். அவ்வாறு செய்தால் மறு உலகிலும் இன்பம் கிட்டும் என்று அவர்கள் கருதுகின்றனர்.

ஆனால், இந்திரன் இவ்விளக்கத்தினால் நிறைவு பெறவில்லை. ''நீரோ, கண்ணாடியோ அலங்கரிக்கப்பட்ட உடம்பைப் பிரதிபலிப்பதைப் போலவே, குருடனைக் குருடனாகவும், அங்கவீனனை அங்கவீனனாகவுமே தான் காட்டும் அல்லவா? உடம்பு அழிந்து விட்டால் உயிருள்ள உடம்பை அது பிரதிபலிப்பதில்லையே! அவ்வாறு ஆயின், உடம்போ அதன் பிரதிபலிப்போ எவ்வாறு நிலையான ஆன்மாவாக இருக்க முடியும்?'' இவ்வாறு ஓடியது இந்திரனின் சிந்தனை. எனவே மறுபடியும் பிரஜாபதியிடம் சென்று தனது ஐயத்தை எடுத்துரைத்தான்

உண்மையை ஐயமற அறிந்து கொள்ள வேண்டும் என்னும் இந்திரனின் ஆர்வம் அவருக்கு மகிழ்ச்சி யளித்தது. ''இன்னொரு முப்பத்திரண்டு ஆண்டுகள் இங்கேயே இருக்கவும்'' என்று கூறினார் அவர். இந்திரனும் அங்கேயே இருந்துகொண்டு, அவருக்குப் பணிவிடை செய்து வந்தான் உண்மையை அறிவதற்கான ஆற்றலும் அவனிடம் வளர்ந்தது.

பின்னர், பிரஜாபதி அவனை அழைத்து ''கனவு உணர்வில் ஒரு பிரபுவைப் போல நடமாடுபவனே உண்மையான ஆன்மா'' என்று உரைத்தார்.

அந்த விளக்கத்தினால் திருப்தி அடைந்தவன் போல் விளங்கிய இந்திரன் தேவர்களுக்கு அதை எடுத்துச் சொல்லும் பொருட்டுக் கிளம்பினான். ஆனால், வழியிலேயே அவனுக்கு மீண்டும் சந்தேகம் ஏற்பட்டது. ''கனவு உணர்வில் தோன்றுவது எப்படி உண்மையான ஆன்மாவாக இருக்க முடியும்? கனவில் சிலசமயம் ஒருவனுக்கு மிகுந்த துயரம் இருக்கலாம், வலி போன்ற உபாதைகள் கூட ஏற்படுகின்றனவே! அச்சமற்ற பாவமில்லாத ஆன்மாவிற்கு இந்த இன்னல்கள் ஏற்படுவது எப்படி சாத்தியம்? எனவே, இத்தகைய அறிவு உண்மையானதாக இருக்க முடியாது'' என்று எண்ணினான் இந்திரன்.

மறுபடியும் பிரஜாபதியிடம் சென்றான். மற்றுமொரு முப்பத்திரண்டு ஆண்டுகள் குருகுலவாசத்திற்குப் பிறகு பிரஜாபதி இந்திரனைக் கூப்பிட்டு ''முழு மகிழ்ச்சியுடன் இருக்கும், ஆழ்துயிலில் களிப்புடன் இருப்பதே மெய்யான ஆன்மா'' என்று சொன்னார்.

ஆனால், இந்த விளக்கமும் இந்திரனின் சந்தேகத்தை முழுவதும் தீர்க்கவில்லை. ''கனவு அற்ற ஆழ்துயிலில் நாம் நம்மையே அறிவதில்லையே நாம் இருக்கிறோம் என்ற உணர்வே நமக்கு ஏற்படுகிறதில்லை. உணர்வே இல்லாத ஒரு நிலை மெய்யான ஆன்மாவுக்குரியதாக - எப்போதும் ஒளியுடன் கூடியதாகவும் உணர்வுள்ளதாகவும் சொல்லப்படும் ஆன்மாவுக்குரியதாக - எவ்வாறு இருக்க முடியும்?'' இவ்வாறு எண்ணிய இந்திரன் மீண்டும் பிரஜாபதியிடம் சென்றான். அவன் ஐயத்தைத் தெரிந்து கொண்ட அவர் அவனை மறுபடியும் ஓர் ஐந்து ஆண்டுக்காலம் தம்முடன் இருக்குமாறு கூறினார்.

பிறகு, பிரஜாபதி இந்திரனுக்கு ஆன்மாவின் மெய்யியல்பை விரிவாக விளக்கிச் சொன்னார்: ''உனக்குள்ள விடாமுயற்சி, இலட்சியத்தில் பிடிப்பு, தீர ஆராயும் மனப்பான்மை ஆகியவற்றைக் கண்டு நான் பெரிதும் மகிழ்கிறேன். அறிவாராய்ச்சிக்கு இவை இன்றியமையாதவை ஆகும். இந்த உடம்பு அழியும் தன்மை வாய்ந்தது. உரிய காலம் வரும்போது அதன் அலுவல் முடிந்த பிறகு அது அழிந்துபோய் விடுகிறது. நிலையான, உடலற்ற ஆன்மா உறையும் அழியும் இருப்பிடம் இந்த உடல். ஆன்மா உடலில் இருக்கும் வரை, அது நல்லது கெட்டது, விரும்பத் தக்கது விரும்பத் தகாதது என்பனவற்றால் பாதிக்கப்படுவது போல் தோன்றுகிறது. ஆனால், உண்மையில் உடலினால் கட்டுப்படாத ஆன்மா மேற்கூறப்பட்ட எதிர்மறை இரட்டைப் பொருள்களுக்கு அப்பாற்பட்டதாக, எதனாலும் பாதிக்கப்படாததாக விளங்குகிறது உருவமும் வடிவமும் இல்லாத வானத்தில் காற்று, வெண் முகில், மின்னல், இடி ஆகியவை சற்று நேரத்திற்கு உருவத்துடனும், வடிவத்துடனும் காட்சியளிக்கின்றன அவற்றின் அலுவல் முடிந்தவுடன் அவை மறைந்துபோய் விடுகின்றன. அவ்வாறே, உடல்களும் உருவத்துடன் சிறிது காலம் விளங்கி விட்டுப் பின்னர் மறைந்து விடுகின்றன. அவை, அழிவற்ற ஆன்மா உறையும் தாற்காலிக குடியிருப்புகள். அத்தகைய உடல்களில் ஆன்மா இருக்கும்வரை அவற்றால் அது கட்டுண்டு இருப்பதைப்போல் தோன்றுகிறது. ஆனால், உடலிலிருந்து விடுபட்டவுடன், அது எல்லையற்ற ஆன்மாவுடன், பரம்பொருளுடன் ஒன்றியிணைந்து விடுகிறது. இந்த ஆன்மாவின் காரணமாகவே பொருள்கள், உயிர்கள் என்பவை இருப்பதாகச் சொல்லப்படுகிறது. கடவுளரும் வணங்கும் ஆன்மா இதுவே எனவேதான், அனைத்து உலகுகளும், விரும்பப்படும் எல்லாப் பொருள்களும் அவர்களிடம் உள்ளன. எல்லா உயிர்களுக்கும் இருப்பிடமாக இருப்பது இந்த ஆன்மாவே. அதுவே மெய்ப்பொருள். கண் முதலிய உறுப்புகள் குறிப்பிட்ட அலுவல்களுக்காக ஏற்படுத்தப்பட்ட கருவிகள் எனவே, அவற்றை ஏற்படுத்தியவர் ஒருவர் இருக்க வேண்டும் மேலும், அவற்றால் பயனடைபவர் என்று ஒருவர் இருக்கவேண்டும். அவர்தான் உண்மையான ஆன்மா''.

பிரஜாபதியின் இந்த விளக்கத்தினால் தெளிவு பெற்ற இந்திரன் இம்மெய்யறிவைத் தேவர்களுக்கு எடுத்துரைத்தான். இந்த அறிவே அவர்களைத் தேவர்களாக, அசுரர்களிடமிருந்து வேறுபட்டவர்களாக இனம் பிரித்துக் காட்டுகிறது. ★

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# குரங்கு வாலி

ராமனுடைய பெருமையை இவ்வளவு ஆழமாக,ஏதோ ஒரு பரம்பரை பக்தன் பேசுவது போல் பேசுகிறுன் வாலி! ஒரு பக்தன் கூட இப்படிப் பேச முடியாது. சகோதர பாசத்திலே உயர்ந்து நிற்கிறவன் ராமன் என்று சொல்கிருனே: ஒரு பரம்பரை பக்தன் கூட சொல்லமுடியாது. சரி, இப்படி பேசுவதற்கு முன்னுல், இதே வாலி என்ன சொன்னுன்? சுக்ரீவனே எப்படி கொல்வேன் என்ருன்? அவன் உடம்பே பாற்கடல். முதுகெலும்பே மந்தரமலே, கைகளே வாசுகிப்பாம்பு, உயிரே தேவாம்ருதம். அப்படி அவன் உடம்பைக் கடைந்து உயிரை குடித்து வருகிறேன் என்ருனே; அப்படி முரட்டுத்தனமாக பேசினவன், அடுத்த நிமிஷம் ராமனுடைய பெருமையை ஒரு பக்தனேப் போல் பேசுகிருனே! எப்படி? இங்கு தான் சிந்திக்கவேணும்.

மனிதனுடைய பண்பு அவன் பெற்றிருக்கிற அறிவுக்குத் தக்கபடிதான் வளரும். தம்பியை இவ்வளவு முரட்டுத் தனமாகக் கொல்வேன் என்று சொல்கிற ஒருவன் அடுத்த நிமிஷம் ராமனுடைய பெருமையை ஒரு பக்தனேப்போல், ஒருஆழ்வாரைப் போல் பேசுகிருனே, எப்படி முடியும். தம்பியை இவ்வளவு கொடூரமாகக் கொல்வேன் என்று சொன்னது முரட்டுப் பேச்சு, முரட்டுச் சுவாபம். அப்படிப் பட்டவன் இப்படிப் பேசினுனே அடுத்த நிமிடம்! எப்படி தெரியுமா! தம்பியை முரட்டுத் தனமாகக் கொல்வேன் என்று சொல்லுகிறவரை, வாலி குரங்கு வாலி: ஆனுல் தாரையின்மூலம் சுக்ரீவனுக்கு நட்பாக ராமன் வந்திருக்கிருன் என்று சொன்னதாலும், ''இன்னுயிர் இராமன் நட்பு அமைந்தனன்' என்று சொன்னதாலும், இராம நாமம் தாரையினுடைய வாயிலிருந்து வெளிப்புறப்பட்டு வாலியின் செவி வழியாக உள்ளேபுகுந்ததிலிருந்து அவன் மனித வாலியாக உயர்த்தப்பட்டான்! அது வரைக்கும் அவன் குரங்கு வாலி! இவ்வளவு முரட்டுத் தனமாக இருந்த குரங்கு வாலியை இப்படி அருமையாகப் பேசவைத்து மனிதவாலியாக ஆக்கியது ராம நாமம்!

இதற்குமேல் தாரை ஒன்றும் சொல்லவில்லே. வாலி போருக்குக் கிளம்பினுன். அவன் உள்ளத்திலே என்ன எண்ணம்? அண்ணன் தம்பி சண்டையிலே ராமன் தலேயிட மாட்டான் என்று எண்ணிப் போகிருன். போர் நடந்தது. ரொம்ப நேரம் நடக்கவில்லே. சுக்ரீவன் தொடையிலே ஒரு கையும் கழுத்திலே ஒரு கையும் கொடுத்து மேலே தூக்கி கர கர வென்று சுற்றிக் கீழே எறியப்போனுன் அந்தச் சமயம் பார்த்து ஒரு அம்பு வந்து மார்பில் பாய்ந்தது! சுக்ரீவனே கீழே போட்டு வாலியும் கீழே சாய்ந்தான். எப்படியாவது அந்த அம்பை எடுத்து அதில் யார் பேர் போட்டிருக்கிறது என்று பார்க்க வேண்டும் என்று எண்ணம். ஏன் என்ருல் இப்போது தான் சிறிது சிறிதாக தாரை சொன்னது ஞாபகத்திற்கு வருகிறது. மெதுவாக அம்பை பிடுங்கிப் பார்த்தான். இந்த மூன்று உலகத்திற்கும் மூல மந்திரமாக உள்ளதும், தன்னே வணங்குவோருக்குத் தன்னேயே அர்ப்பணம் செய்யக் கூடியதும், ஏழு பிறவிகளிலும் வரும் நோய்களேப் போக்க வல்லதும், அப்படிப்பட்ட ''ராமன்'' என்ற நாமம் அவன் கண்களில் தெரிந்தது.

## மனித வாலி

'மும்மைசால் உலகிற்கெல்லாம் மூல
மந்திரத்தை
தம்மையே தமக்கு நல்கும் தனிப்
பெரும் பதத்தை
இம்மையே ஏழமை நோய்க்கும் மருந்
தினே-இராமன் என்றும்
செம்மை சேர் நாமந்தன்னே கண்
களில் தெரியக் கண்டான்''

இந்த இடத்தில் தான் ஆழமாகச் சிந்திக்க வேண்டும். கண்களில் 'தெரிய'க் கண்டான். 'தெரிந்து' கண்டான் அல்ல. கம்பன் போட்டிருக்க வேண்டிய வார்த்தை, தெரிந்து கண்டான், ஆனுல் 'தெரிய'க் கண்டான். இந்த 'தெரியக்' கண்டானுக்கு 'தெரிந்து' கண்டானுக்கும் என்ன வித்யாசம்?

கடிகாரத்தை எங்கேயோ வைத்து விட்டு நாம் தேடுகிறேம் என்று வைத்துக் கொள்வோம். நடு நடுவிலே ஏதெல்லாமோ எதிர்ப்படும். துண்டு கிடைக்கும், பேனு கிடைக்கும், கண்ணுடி கிடைக்கும். இதையெல்லாம் நாம் தேடவில்லே, கடிகாரத்தைத் தான் தேடுகிறேம், இந்த மூன்றும் அதுவாக குறுக்கே வந்தது; நாம் காண்கிறேம். நாம் தேடுவது கடிகாரத்தைத்தான். ஆனுல் நடுவே துண்டு 'தெரிய' நாம் கண்டோம். பேனு 'தெரிய' நாம் கண்டோம். கண்ணுடி 'தெரிய' நாம் கண்டோம். கடைசியில் கடிகரத்தை 'தெரிந்து' காண்கிறேம். தானுகத் தேடிப் போனுல் தெரிந்து காண்பது, அது

## தெய்வ வாலி

வாகக் குறுக்கே வந்தால் தெரியக்' காண்பது.

இங்கே ராமனேப் பார்க்க வாலி போகவில்லே. வாலியாகப் போயிருந்தால் 'தெரிந்து' கண்டான் என்று கம்பர் போட்டிருப்பார். வாலிக்குத் தன்னேக் காட்ட ராமன் வந்ததால் இவன் குறுக்கேகண்டான். ஆகையால் 'தெரியக் கண்டான்'! வாலியாகப் போயிருந்தால் 'தெரிந்து கண்டான்' குரங்கு வாலியை மனிதவாலி யாக்கி அவனேயே தெய்வ வாலியாக்குவதற்

---

எஸ். வி. வைத்தியநாதன்,
சென்னே - 28

# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூசைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

1-3-79 முதற்கொண்டு திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் நிகழ்ச்சி நிரல்கள் கீழ்வருமாறு மாற்றஞ் செய்யப்பட்டுள்ளன.

**சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய்க் கிழமைகளில்;**

**காலை**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
3-30 முதல் 3-45 வரை : சுத்தி
3-45 முதல் 4-30 வரை : தோமாலா சேவை
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை. அதாவது ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் மதியம் 12-00 வரை : ஸர்வ தரிசனம்
மதியம் 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) இரண்டாவது மணி.

**மாலை**

1-00 முதல் இரவு 8-00 வரை : ஸர்வ தரிசனம்
இரவு 8-00 முதல் 9-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யம் (ஏகாந்தம்)
9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்
நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
காலை 12-30க்கு: ஏகாந்த சேவை (தனி.)

**புதன் கிழமைகளில் (ஸஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)**

**காலை**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
3-30 முதல் 3-45 வரை : சுத்தி
3-45 முதல் 4-30 வரை : தோமாலா சேவை (தனி.)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாக ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை, (சகஸ்ர நாம அர்ச்சனை) (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்து முறை, சேவைக்கான ஏற்பாடுகளை மேற்கொளல் முதலியன.
6-00 முதல் 8-00 வரை ; ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) மணி.
8-00 முதல் இரவு 8-00 வரை : ஸர்வ தரிசனம்
இரவு 8-00 முதல் 9-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யம் (ஏகாந்தம்)
9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்
நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை: சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
காலை 12-30க்கு: ஏகாந்த சேவை. (தனி.)

**வியாழக்கிழமைகளில் (திருப்பாவாடா உத்ஸவம் நடைபெறுவதால்)**

**காலை**

3-00 முதல் 3-30 வரை: சுப்ரபாதம்
3-30 முதல் 3-45 வரை: சுத்தி
3-45 முதல் 4-30 வரை: தோமாலா சேவை (தனி.)
4-30 முதல் 4-45 வரை: பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாக ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை: முதல் அர்ச்சனை; சகஸ்ர நாம அர்ச்சனை (தனி)
5-30 முதல் 6-00 வரை: முதல் மணி, பலி, சாத்து முறை.
6-00 முதல் 8-00 வரை: சாலிம்பு, 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன.
8-00 முதல் இரவு 8-00 வரை: ஸர்வ தரிசனம்
இரவு 8-00 முதல் இரவு 10-00 வரை: பெரிய சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவு மணி ஏகாந்தம்.
இரவு 10-00 முதல் நள்ளிரவு 12-00 வரை: பூலங்கி சேவை.
நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை: சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
காலை 12-30 க்கு: ஏகாந்த சேவை (தனி)

**வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

**காலை**

3-00 முதல் 3-30 வரை: சுப்ரபாதம்.
3-30 முதல் 5-00 வரை: சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
5-00 முதல் 7-00 வரை: அபிஷேகம்.
7-00 முதல் 8-30 வரை: ஸமர்ப்பணை முதலியன.
8-30 முதல் 9-30 வரை: தோமாலா சேவை, அர்ச்சனை (தனி.)
9-30 முதல் 10-00 வரை: 2வது மணி, பலி, சாத்து முறை.
10-00 முதல் இரவு 8-00 வரை: ஸர்வ தரிசனம்
இரவு 8-00 முதல் இரவு 9-00 வரை: சுத்தி, இரவு கைங்கர்யங்கள்.
இரவு 9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்
நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை; சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
காலை 12-30க்கு: ஏகாந்த சேவை (தனி)

குறிப்பு : சுப்ரபாதத்திற்கு ரூ. 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப் படுவர். அர்ச்சனை, தோமாலா சேவை, அபிஷேகம் ஆகியவற்றிற்கு ரூ. 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் அனுமதிக்கப்படமாட்டாது. ரூ. 4/-க்கு விற்கப்படும் சேவானந்தர டிக்கெட்டு வசதிகள் தற்போது நிறுத்தப்பட்டுள்ளன.

காக அந்தத் தெய்வம் இறங்கி வந்தது அது குறுக்கே 'தெரிய' வாலி கண்டான்.

நேரே வந்து நிற்கும் ராமனைப் பார்த்து வாலி கேட்கிறான்' "நீ படித்த மனு தர்ம சாஸ்த்திரத்தில் அரக்கன் ஒருவன், ஒருவன் மனைவியைக் கொண்டு போய் விட்டால் எதிரில் வரும் குரக்கன் ஒருவனைக் கொல்ல வேண்டும் என்று கூறியிருக்கிறதா? நீ செய்த காரியம் மிகப் பெரிய தர்ம காரியம் என்று நினைக்காதே. வாலியைக் கொன்றேன் என்று எண்ணாதே ராமா; தருமத்தின் வேலியைக் கொன்றாய். உன்னுடைய மண்ணுக்கு என்னுடைய ஒரு உயிர் தான் பாரமா?"—இப்படியெல்லாம் பேசிய வாலி எப்படி நிறைவு பெற்றான் என்பது தான் இனி முக்கியம்.

இப்படி கேட்டு முடித்தபோது ராமபிரான் சொன்னார். 'வாலி, நான் உன்னைக்கொல்ல வரவில்லை, தண்டிக்க வந்தேன்' என்று. வாலிக்கு புரியவில்லை "என்ன! தண்டிக்க வந்தாயா? நான் என்னதவறு செய்தேன்?' என்று கேட்டான். உடனே ராமன் விளக்கம் கொடுக்கிறார். "வாலி, நீ இரண்டு குற்றங்கள் செய்தாய். ஒன்று, உன் தம்பிக்கு உரிய ராஜ்யத்தைத் தர மறுத்தாய். இரண்டு, உன் தம்பியின் மனைவியை அவனிடமிருந்து பிரித்து உனக்கு உடமையாக்கிக் கொண்டாய். இது மிகப் பெரிய குற்றம். ஆக, இந்த இரண்டு குற்றங்களுக்காக உன்னைத் தண்டிக்க வந்தேன்".

வாலி கேட்டான். "ராமபிரானே! தன் தம்பியினுடைய மனைவியைத் தன் மனைவியாக ஆக்கிக் கொள்ளக் கூடாது என்பதெல்லாம் மனிதர்களுக்காக வகுக்கப்பட்ட நியதியே தவிர, அந்த ஒழுக்கத்தை ஒரு குரங்கினிடம் நீ எதிர் பார்க்கலாமா? அந்த சட்டம் எல்லாம் மனிதருக்காக. அதைப் போய் குரங்குக் கூட்டத்திலே ஒரு குரங்கினிடம் எதிர் பார்த்து அது இல்லாததினால் வதம் செய்தேன் என்பது சரியா?"

இராமபிரான் பதில் சொன்னார். "வாலி, இப்பொழுது நீ ஒரு குரங்கு என்பதை நினைவுபடுத்திக் கொண்டு, தம்பியின் உடமையைத் தன் உடமையாக்கிக் கொள்வது குரங்குகளுக்குத் தவறு என்று என்னிடம் கேட்கிறாய். நீ செய்த தவற்றை நான் சுட்டிக் காட்டுகிறபோது, குரங்குப் பிறப்புக்குப் போகிறாய். ஆனால், நான் செய்த தவறை எடுத்துக் காட்டும் போது நீ குரங்காக இல்லை! மனிதனாக மாறிப் பேசுகிறாய்!"

"ஆக, நீ குரங்காகவே பிறந்து, குரங்காகவே இருந்திருந்தால் இந்த ஒழுக்கத்தை உன்னிடம் நான் எதிர் பார்த்திருக்க மாட்டேன். குரங்காக பிறந்து, மனித நிலைக்கு உயரக் கூடியவன், மனித நிலையிலே இந்த குற்றங்கள் இல்லாமலிருந்தால் நீ தெய்வ நிலைக்குப் போகலாம் என்பதற்காக உன்னைத் தண்டிக்க வந்தேன்" என்றார் இராமபிரான்.

வாலி மட்டும் இல்லை. நாமும் அப்படித் தான். அடுத்தவன் குற்றத்தை விமரிசிக்கிறபோது மிகவும் பலமாக விமரிசிப்போம். இதுவே நம்ம வீட்டுக்குற்றம் என்றால்......... ராக் போர்ட் இரயில்வே ஸ்டேஷன்லே கடைசி நிமிஷத்திலே போய் வண்டி கிளம்புகிற நிலையிலே, இடம் கிடைக்காமல், உள்ளே இருப்பவனைப்பார்த்து என்னமா கூச்சல் போடுகிறோம். "திறய்யா கதவை. உங்க அப்பன் வீட்டு ரயிலா. திறய்யா". அவனும் திறந்து விடுகிறான். நாமும் ஏறிவிடுகிறோம். வண்டி அடுத்த ஸ்டேஷன்லே போய் நிற்கிறது. ஐந்தாறு பேர் நம் பெட்டியை நோக்கி வந்து கதவைத் தட்டுகிறார்கள். அப்போது நாம் என்ன பண்ணுகிறோம்? ஜன்னல் வழியாகத் தலையை வெளியே விட்டு, "எல்லாம் இங்கேயே வாங்கய்யா. ஒரு நாலு பெட்டி பார்த்து ஏறுவோம்னு போகாதீங்க. எல்லாம் இங்கேயேவா..." என்று எறிஞ்சு விழுவோம். நாம் ஏறும்போது நாலு பெட்டி பார்த்து ஏறினோமோ? ஆக, நமக்கு என்று வரும்போது ஒரு தர்மம்; அடுத்தவனுக்கு என்று சொன்னால் ஒரு தர்மம்!

அடுத்த வீட்டுப் பையன் பந்தை எறிகிறான். அதை எப்படி விமரிசிப்போம் "பையனைப் பார்த்தேளா சார் குண்டாந்தடி மாதிரியிருக்கான். மூணரை வயசு சார்; மூணரை வயசு! பந்துஎறியறானும் பந்து." இதே நம்ம வீட்டுப் பையன் உண்டிக் கோலில் கல்லை வைத்து அடிக்கிறான். அடுத்த வீட்டுக் கண்ணாடி ஜன்னல் உடைந்து விடுகிறது. அப்போது என்ன சொல்கிறோம். "சார்...... டீன் ஏஜ்பாய். இப்பதான் நைன்டீன் ஆறது...ஏதோ கல்லை எறிஞ்சான். கண்ணாடி உடைந்தது.

இதையேதான் திருவள்ளுவர் சொன்னார். அடுத்தவனுடைய குற்றங்களை எடுத்துப் பேசு. தப்பு இல்லை. ஆனால் முதலில் உன்னை ஒரு தரம் பார்த்துக்கொள். "ஏதிலார் குற்றம் போல் தன் குற்றம் பார்த்திருப்பின் தீதுண்டோ மன்னுமுயிர்க்கு" என்பது திருவள்ளுவர் வாக்கு. அடுத்தவனைப்பற்றி குற்றம் சாட்டி ஒரு விரலால் சுட்டிக் காட்டும்போது, பாக்கி மூணு விரல்கள் நம்மைத் தான் பார்த்துக் கொண்டிருக்கின்றன. அடுத்தவனை நீ அயோக்கியன் என்று சொல்கிறபோது நம் கையே நமக்குச்சொல்கிறது, "நீ மூன்று மடங்குடா, நீ மூன்று மடங்குடா, நீ மூன்று மடங்குடா" என்று. அதை யாரும் கவனிப்பதில்லை.

இங்கே, இராமபிரான் செய்த தவற்றை பகுத்தறிவோடு பேசுகிற வாலி, அவன் செய்த குற்றத்தை இராமன் காட்டுகிற போது குரங்குக் குலத்திற்குப் போகிறான். குரங்காகவே பிறந்து குரங்காகவே வளர்ந்து, குரங்காகவே இறப்பதற்கு ஏற்றவனாக இருந்தால் வாலியின் வாதம் நியாயமானது. அவனிடத்திலே இந்த குற்றத்தை எதிர்பார்க்கக் கூடாது.

நான்காவது வகுப்போடு படிப்பை நிறுத்துகிற பையன், நாலும் மூன்றும் ஒன்பது என்ருல் தப்பில்லே. ஆனுல் அவனே தப்பித் தவறி B.A mathematics வந்து விட்டான் என்று வைத்துக் கொள்வோம். அங்கேயும் போய் நான்கும் மூன்றும் ஒன்பது என்ருல், ''ஏனடா, நாலாம் க்ளாஸ் லேயும் இப்படியே சொன்ஞய், இங்கேயும் இப்படியே சொல்கிருயே'' என்ருல், அவன் ''சார், நாலாம் க்ளாஸ்லே ஒரு பேச்சு; B.A. க்ளாஸ்லே ஒரு பேச்சு என்று கிடையாது சார் பேச்சு மாறுகிறவன் மனுஷஞ சார்' என்ருனும்! ஆக, நாலாம் க்ளாஸோடு படிப்பை நிறுத்துகிறவன் அப்படிச் சொல்லலாம். B.A. வந்தால் சொல்லக் கூடாது.

ஆக, ''வாலி,நீ குரங்காகவே இருந்தால் இவ்வாறு பேசலாம். குரங்கிற்கு இந்த சட்டம் செல்லுமா என்று. ஆனுல் நீ மனித நிலேக்கு வந்து என்னே இம்மாதிரி கேள்விகளே கேட்கிற போது இப்படி பேசலாமா? இன்னென்று சொல்கிறேன் கேள் வாலி. உலகத்திலே பிறப்பு எதுவாக இருந்தாலும், தகுதியான காரியம் இது, தகுதியற்ற காரியம் இது என்று பாகுபடுத்தி தகுதியான காரியத்தை ஒரு மிருகம் செய்தாலும் அது தேவனுகவே கருதப்படும். தகுதியற்ற ஒரு காரியத்தை தேவனே செய்தாலும் அவன் மிருகமாகவே மதிக்கப் படுவான். மனிதர்கள் என்று சொன்னுல் தோற்றமுடையவர்கள்தான் மனிதர்கள் என்று சொல்லாதே. மனிதர்களிலேயே மிருகங்கள் உண்டு. மிருகங்களிலும் மனிதர்கள் உண்டு. எல்லாப் பறவையும் ஜடாயு ஆகுமா? எல்லா யானேயும் கஜேந்திரன் ஆகுமோ?'' என்று திருவள்ளுவர் சொன்னுர்: நாட்டிலே வாழ்வதைவிட காட்டிலே வாழ்வது சுலபம்! சுலபமா? ஆம். சுலபம் தான்! காட்டிலே புலி சிங்கம் எல்லாம் இருக்குமே? வள்ளுவர் சொன்னுர், 'இருக்கட்டுமே, கரடி இருக்கு, புலி இருக்கு என்ருல் பார்த்த உடனே தெரியு மல்லவா? புலி என்ருல் முகம் இப்படி இருக்கும், கரடி என்ருல் இப்படி இருக்கும், யானே என்ருல் இப்படி இருக்கும், என்று கடவுள் படைத்திருக்கிருர். பார்த்த உடனேயே தெரிகிறது. ஜாக்கிரதையாக இருந்து கொள்ளலாம், ' ஆனுல், மனிதனுக்கு அப்படியில்லே. எல்லாரையும் ஒன்ருகவே படைத்திருக்கிருர் கடவுள். இதுலே எது சிங்கம், எது புலி என்று நமக்குத் தெரியவில்லே!

ஆகவே, 'வாலி, நீ குரங்காகவே இருந்து பேசினுல் இந்த ஒழுக்கத்தை என்னிடத்தில் எதிர்பார்க்கலாமா என்று கேட்கலாம். ஆனுல் நீ மனித நிலேக்கு உயர்ந்து இவ்வாறெல்லாம் பேசும் போது, உன்னிடத்தில் இந்த ஒழுக்கம் இருப்பது தவறு. எனவே தான் தண்டிக்க வந்தேன்' என்று இராமன் விளக்கம் கொடுத்தார்.

(அடுத்த இதழில் முடியும்.)

## அறிவிப்பு

திருமலேயில் காட்டேஜுகளுக்காக முனபணம் செலுத்தி, தனி ஒதுக்கீடு (Reservation) செய்து கொள்ளும் யாத்திரிகர்களின் நன்மைக்காக, மேலாண்மை கீழ்வரும் சலுகைகளே அளித்துள்ளது.

1. காட்டேஜுகளுக்காக தனி ஒதுக்கீடு செய்து கொண்ட தேதிகளுக்குள் சம்பந்தப்பட்ட யாத்திரிகர்கள் நாட்கழித்து வந்தாலும், மீதம் இருக்கும் நாட்களுக்கு, அவர்கள் கணக்கில், வராத நாட்களுக்குரிய கட்டணத்தைப் பிடித்துக் கொண்டு, மீதித் தொகைக்கு அவர்களுக்கு இட வசதி அளிக்கப்படும்.

2. காட்டேஜுகளுக்காக முன் பணம் அனுப்பியவர்கள், தாங்கள் கோரியபடி தங்கள் பெயரில் ஒதுக்கீடு செய்யப்பட்ட நாட்களே, சூழ்நிலேக் காரணமாக மாற்றிக் கொள்ள நினேத்தால், அவர்கள் இரண்டு நாட்களுக்கு முன்பேயே, (அதாவது ஒதுக்கீடு செய்யப் பட்ட தேதிக்கு முன் இரண்டு நாட்கள்) இது சம்பந்தமாக விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும்.

3. காட்டேஜுகளுக்காக முன் பணம் செலுத்தியவர்கள் தங்களுக்கு வழங்கப்பட்ட தனி ஒதுக்கீடு தேதிகளில் வர இயலாது, செலுத்திய தொகையைத் திருப்பிப் பெற வேண்டுபவர்கள், தங்கள் எண்ணத்தை, ஒதுக்கீடு செய்யப்பட்ட தேதிக்கு இரண்டு நாட்களுக்கு முன்பேயே விண்ணப்பம் ஒன்றன் மூலமாக தெரிவித்தல் வேண்டும்.

செயலாட்சித் தலேவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

# உலகத்தோடு ஒட்ட ஒழுகல்-பல கற்றும்?

ஒரு காரியத்தைத் தெரியாமல் செய்பவன் குழந்தை. புரியாமல் செய்பவன் மனிதன். அதே காரியத்தைத் தெரிந்துகொண்டும் புரிந்துகொண்டும் நேர்மாறாகச் செய்பவன் மிருகம்.

—புதுமைப் பித்தன்

He that is not handsome at twenty,
nor strong at thirty, nor rich
at forty, nor wise at fifty will
never be handsome strong rich (or)wise

*—Herbert.*

முடிவிலா இழந்த செய்கையின் பொக்கிஷக் குவியலில் மனிதன் தவிக்கிறான். திடீர் திருப்பங்கள் எதிர்பார்க்கும் நேரத்தில் திருப்தி தருவதில்லை. திருப்தி ஏற்படும் நேரத்தில், திருப்பங்கள் மனிதனை திசை திருப்பி விடுகின்றன. சூழ்நிலையைச் சரிக்கட்டிப் போகும் மனிதனுக்குச் சோதனை வருகிறது. சோதனையைத் தட்டி விரட்டும்போது சூழ்நிலை அவனை திக்குமுக்காடச் செய்கிறது. சொந்த பந்தங்களை இழுத்துப் போட்டு ஆதரிக்கும்போது அவனை உதாசீனப் படுத்துகிறது. விரும்பாதபோது அந்த சொந்தங்கள் இடம் கொடுத்தால் அவனால் அந்த பந்தத்தினின்று விடுபட முடிவதில்லை; நினைத்த ஆசைகளை ஒரு போதும் ஒருவனால் நிறைவேற்ற முடியாது. ஒரு வேளை, அவைகள் நிறைவேறும் தருவாயில் இருக்கும்போது அவனைச் சிவன் பிரித்து விடுகிறது. வாழ ஒருவன் மறுக்கும் போது இந்த உலக வாழ்வு அவனை விடுவதில்லை. மீள ஒருவன் தற்கொலை செய்து கொள்ளும் போது இகலோக இச்சை அவனை ஆவியாக்கிப் பார்த்து மீளவும் அவனைத் தொந்தரை செய்கிறது. நிதரிசனமான நிலையில் ஒதுங்கி வாழ முற்படும்போது எல்லை மீறிய அகதுக்கங்கள் அவனைச்சூழ்ந்து கொள்கின்றன. தீராத அவாவில் ஒருவன் உழலும் போது அவனுக்குத் தீராத வெறுப்பு ஏற்படுகிறது.

அதிர்ஷ்டம் சிலநக்கண்டு-இறப்பு
எல்லார்க்குமே உண்டு

—ஷேக்ஸ்பியர்

கேவலங்களையும் மாத்திரைகளையும்
சுவைத்து உருசி பார்க்கக் கூடாது

—ஜெர்மனி

உழைக்காத செல்வனுக்கு உணவே
உடலாகிறது
தீராத உழைக்கும் ஒருவனுக்கு உடலே
உணவாகிறது
ஏழை தன் வயிற்றிற்கு உணவைத்
தேடுகிறான்
செல்வனோ தன் உணவிற்கு வயிற்றைத்
தேடுகிறான்

—துருக்கி

செல்வன் தன் உணவால், செல்வத்தால், நோய் கண்டு மடிகிறான். வறியவனுக்கு வரும் நோயினை வறுமை விரட்ட அதனாலேயே மடிகிறான்.

காலம் என்னும் பொல்லாததேவன் யாரையும் சுகமாய் விட்டு வைப்பதில்லை. நம்மில் பெரும்பாலோர் 25000 நாட்கள் கூட வாழ்வதில்லை.

காவி உடை அணிந்த சாமிக்குக் கண்டதெல்லாம் ஈசன், ஆனால் பாமரர்க்கு?

மனிதனின் தேவைகளும் ஆசைகளும் கடவுளுக்கும் தோன்றும் என்னும் அடிப்படையில் மனிதனும் தேவை உள்ளவைகளை கடவுளுக்கும் அளித்துப் பின் தானும் அனுபவிக்கிறான்.

—அரேபியா

துரத்தி உன்னை ஆசை தொடராமல்
விரத்தியினால் ஆங்கவற்றை விட்டுப்
பரத்தில்
செய்யடா செய்யடா சேர பரபஞ்சமெலாம்
பொய்யடா பொய்யடா பொய்

—சிவபோகசாரம்.

## நோய்க்கு அறிகுறிகள் :

முட்டையில வெளியேறிய குஞ்சு தன் உயிரைக் காப்பாற்றியதற்காக மீண்டும் ஓட்டுக்குள் போவது சாத்தியமில்லை; அதுபோல இவ்வுடம்பில் வியாதி தோன்றுவதால அது குணமாகாது மீண்டும் இவ்வுடம்பில் புகுதல் சாத்தியமில்லை. வியாதிக்கு முதல் அறிகுறி உணர்ச்சிகள்தான். உணர்ச்சிகளுக்கு மூலகாரணம் கோபப்படுவது.


E. S. குமரன், B.SC.,
சேலம்


கோபத்தின் விளைவு மிகவும் கொடியது. அதன் விளைவுகளை Dr. Canon என்பவர் மிகத் தெளிவாகக் கூறியுள்ளார். அவர் Har Ward Universityயைச் சேர்ந்தவர்.

## கோபத்தின் விளைவில் புறமாறுதல்கள் :

முகம் சிவத்தல், கணகள் இமைகள் விரிதல், விழிகளின் வெள்ளைப் பகுதி இரத்தச் சிவப்பேறுதல், உதடுகுவிந்து மடிதல், பல் கடித்தல், கை விரல்களைத் தானே மடித்தல், அதிகமான பதற்றம், அதிர்ச்சி, குரல் தடுமாற்றம் போன்ற மாற்றங்கள் தோன்றும்.

## கோபத்தின் விளைவில் உள் மாறுதல்கள் :

இரத்தம் கடினமடைதல், சண்டைக்குத் தயாராய் இருக்கும் வெறித்தனம், இரத்தம் உறைதல், இரத்த அணுக்கள் 1 க.மி. மீட்டருக்கு 5 இலட்சம் அளவுக்கு அதிகமாதல், வயிற்றுத் தசை அழுத்தம் ஏற்படல், செரிமான உறுப்பு வேலை செய்யாதிருத்தல், அடி வயிற்றில் வலி ஏற்படல், இதயத் துடிப்பு 180 தடவையிலிருந்து 220

வரை அதிகமாதல், இரத்த அழுத்தமும் 130 மி. மீல் இருந்து 230 மி.மீ, வரை அதிகமாதல் ஆகிய மாற்றங்கள் ஏற்படும்

ஷ மாற்றங்கள் சாதாரண மனிதனின் உணர்ச்சியை அதிகப்படுத்தும் போது வியாதி தோன்றுவதற்கு முக்கியமான காரணங்களாகும்.

Be slow of Tonque and quick of eye
—Cervantes

Hasten Slowly – Augustus caesar

கோபம் ஏற்படுவதற்கு முன்னர் நீரைக் குடித்தலும், 1 முதல் 100 வரை எண்ணுதலும், அப்படியும் அடங்காத அதிகோபமானுல் 100 முதல் 1 வரை இறங்கு வரிசையில் எண்ணுதலும், ஒரு மாற்று மருந்தாகும்.

கலலினுல் மயிரினுல் மீதூண
விரும்பலால்
கருதிய விசாரத்திஞல கடுவழி
நடககையால்
மலசலம் அடக்கையால கனி பழங்கறி
உண்ணலால்
நெலலினுல உமியினுல் உண்டபின்
மூழ்கலால்
நித்திரைகள் இல்லாமையால்
நீர்பகையினுல பனிக்காற்றின்
உடல்நோதலால்
நீடு சருகிலே யூறலால்
மெல்லி நல்லார் கலவி அதிகம்
உள் விரும்பலால்
வீழ்மலம சிக்குகையினுல மிகுசுமை
யெடுத்தலால்
இளவெயில காய்தலால் மெயவாட
வேலே செயலால்
வலலிரலிலே தயிர்கள் சருகாதி
உண்ணலால்
வன்பிணிக்கிடமென்பர் காண்.
—குருபாத தாசன் குமரேசசதகம்

தன்னேத்தான் பேணுக்காலுஞ்
சரீரத்தின் தண்டிப்பாலும்
பின்னுற்ற விசாரத்தாலும்
பின்மலசலத்திஞலும்
அன்னத்தைப் பொறுப்பதாலும்
அரையுடல் முழுகலாலும்
தன்னமத்தை இகழ்வதாலும
சரீரத்தில் வியாதி தோனறும்
—பழம்பாடல்.



ஸ்ரீ ஏகபாதமூர்த்தி - திருவெற்றியூர்.
டி. ஸ்ரீநிவாசன் -சென்னே.

மனத்தை ஒரு மனப்படுத்துவதிஞல் ஒரு வித உள்ளுணர்வு தோன்றும். கோபத்தை, உணர்விணே ஒடுக்க ஒரு நிலேப்படுத்த மனேதத்வ முறையில் தினசரி தியானம் செய்யவேண்டும். கீழ்க்கண்ட சக்கரத்தை ஒரு தகட்டிலோ, அட்டையிலோ வரைந்து சுவற்றில் மாட்டி விட வேண்டும்.

தட்டின் நடுப்பகுதியை உற்றுப் பார்த்தல்வேண்டும். சற்றுப்பார்க்க, மேலும் பார்க்கப் பார்க்க நடுவில் உள்ள எழுத்து கருப்புப் புள்ளியாய்த் தோன்றும். இந்தப் பயிற்சி, சற்று கடினமானதுதான். தொடக்கத்தில் தலேச்சுற்றல், மயக்கம், ஒருவித மனக்கிளர்ச்சி ஏற்படும். ஆனுல் பயிற்சியாகச் சற்று நேரத்தை சுமார் 15 நிமிடம் இதில் ஒதுக்கி வந்தால் உள்ளுணர்வும், ஒரு வித மனத்திருப்தியும், காரியத்தைச் சாதிக்கவல்ல தெம்பும் ஏற்படும். பயிற்சி உருவேற உருவேற நேரத்தை அதிகப்படித்த அதிகப்படுத்த யோக சமாதி நிலே திரிகால தரிசனம் சூன்யக் காட்சிகளே உருவேற்றல் முதலியனவும் உண்டாகும்.




## நரம்புத் தளர்ச்சிப் பணிக்குக் காரணங்கள் :

உறக்கமின்மை, நீரழிவு நோய், பெருந்தீனி, மலச்சிக்கல், இரத்த அழுத்தம், பீதிநோய், ஒட்டாத சூழ் நிலையில் வாழ்தல், அளவுக்குமீறி காம விளையாட்டுக்கள், சிறு வயதில் தவறான முறையில் சக்தியை விரயம் செய்துவிடல், வயதில் மூத்த பெண்களுடன் நீண்டகாலம் காம விளையாட்டு விளையாடுதல், மன விருப்பத்துக்கு மாறாகக் கட்டாய பிரம்மச் சரியம், திடீர் அதிர்ச்சி (Worry often gives a small thing a big shadow — swedish proverb) குடும்பத்தில் வெறுக்கத்தக்க சூழ்நிலையைச் சமாளித்தல், தாங்க இயலாத குடும்பப் பளு, மனத்திற்குப் பிடிக்காத வேலை செய்தல், நரம்புவலுவிற்கு உணவின்மை, ஆகிய காரணங்களால் நரம்புத் தளர்ச்சி நோய் உண்டாகும். மேலும் கவலையில் நரம்புத் தளர்ச்சி ஏற்படுவது அதி சீக்கிரம் அது மூளைக்கும் மனத்துக்கும் உள்ள தொடர்பையும் தளர்ச்சியுறச் செய்யும். உறக்கத்தால் கவலை சிறிது ஒதுங்கி நிற்கும்.

கடவுள் நிலை சொரூபம், குணம், குறி, நிறம், இல்லாதது. வாக்கு மனம் கடந்தது. இயற்கையை உடலாகக் கொண்டது. அது எல்லாவித நாடி நரம்பிற்கும் அப்பாற்பட்டது. உள்ளொளி அளிப்பது. எனவே கீழ்க்காணும் பாடலை த்யானத்தில் தினந்தோறும் அப்யசிக்க. நரம்புத் தளர்ச்சி நோய் குணமாகவும், மற்றக் கவலைகளைப் போக்கவும் ஔஷதமாகும்.

கண்ணொளியே மோனக் கருமபே
கவலைபிறப
பண்ணொளிகரும் உளளொளியாம
பான்மையினை
நண்ணி சிதநமிரஙகில தென் சித்நந
தெளியாலேறித்தனைகரும ஆதரவுமஇல
—தாயுமானவசுவாமிகள்.

## தரும சிந்தனை அவசியம் :

இடர் வந்த போதும் நோய் வந்த போதும் மட்டும் தான் தருமம் செய்வது என்பது கூடாது. நம்மால் இயன்றதை உதவ நினைத்தும், மனம் உதவ மறுக்கும் போதுதான் துணிந்து உதவுவதின்போது பிறக்கும் கருணை ஒரு நாள் தலை கொடுத்துக் காக்கும். அதற்காகச் செய்யும் தருமத்திற்கும், உதவிக்கும் கைமாறு கருதுவது என்பது அறவே கூடாது.

தன் பணப்பையை நிறைத்துக் கொண்டவன் வறியவனுக்குப் போதனை புரிகிறான்.

—பிரான்ஸ்.

மிகுதியாக ஒலி எழுப்பும் டமாரத்தின் உள்ளே என்னவோ இருக்க வேண்டும் என்று எண்ணி விடாதே. வெறும் காற்றுத்தான் இருக்கிறது.

—ஸ்விட்சர்லாந்து.

பணமிருந்தால் உன்னையே, உனக்குத் தெரியாது. பணம் இல்லாவிட்டால், ஒருவருக்கும் உன்னைத் தெரியாது.

—ஸ்பெயின்.

நன்றி என்பது வானுலகம் போய் விட்டது, போகும் போது ஏணியையும் எடுத்து விட்டது.

—போலந்து.

ஆகவே தர்மம் என்பது சொல்லிச் செய்யும் கலை அன்று. வலது கையில் கொடுப்பது இடது கைக்குக் கூடத் தெரியாததாய் இருக்க வேண்டும். (நன்கொடைகளும் அப்படித்தான்)

அழகின் சகோதரி கர்வம்–மகள் ஆசை

—ஸ்லோவேகியா.

ஆனால் சிறுதத தர்மம் செய்பவர்கள் சிலர், பிணியால் அவதிப்படுவது ஏன? அது பூர்வ கர்மப் பலன்; அதற்காக அவைகள் எப்போதும் மேற் சொன்னவர்களை தொடர்ந்து கொண்டிருக்குமா? வறியவனும் ஒரு நாள் செல்வந்தன் ஆகி விடுவதில்லையா? ஆகவே கீழ்க்கண்ட 32 அறங்களில் இயன்றவற்றை அவரவர்கள் நம் வாழ்க்கையில் கையாளுதல் கைமாறு கருதாதஅறச்செயல்களின் வரிசையில் சேர்க்கப்படுவது ஒன்றாகும்.

1. பெறுதற்கு வீடு விடுதல்
2. மகவுபெறுதற்கு வேண்டியன உதவுதல்
3. காதணி அளித்தல்
4. மகவுக்குப் பாலளித்தல்
5. சத்திரம் கட்டல்
6. மடம் அமைத்தல்
7. பசுக்களின் தினவு நீக்கும் கல் நடுதல
8. பெண்களுக்கு இன்பம் அளித்தல் (வேண்டிய உதவிகளைச் செய்தல் விதவா விவாகம்)
9. நாவிதற்கு உதவுதல்
10. சலவையாளருக்கு உதவுதல
11. மறையில் கூறுமாறு கண்ணாடி யீதல், (தற்காலத்தில் வறியவருக்கு மூக்குக் கண்ணாடி அளித்தல்)
12. நீர் வேட்கையைத் தணித்தல்
13. தலைக்கு எண்ணெய் கொடுத்தல்
14. பசுக்களுக்குத் தீனி போடுதல்
15. ஆதரவற்ற பிணத்தை அடக்கம் செயதல், (தற்காலத்தில அது பறறி செய்தி கேட்டு இயலாதவர்க்கு பண உதவி அளித்து ஷ காரியம் நிறைவேற்றல்)
16. இறக்கும் உயிரைக் காத்தல்

17 தின்பண்டம் அளித்தல் (அனுதைச்சிறுர்க்கு)

18. வெற்றிலை பாக்குக் கொடுத்தல் (சுமங்கலி, வறியவர்)

19. சுண்ணும்பு உதவுதல் (தற்காலததில் வறியவர் வீட்டிற்கு வெள்ளையடிக்க பண உதவி அளித்தல்)

20. சிறையில் அகப்பட்டவாக்கு உண வளித்தல.

21. பிறர்துயரம் போக்குதல (உ-ம்) ஏதாவது ஒரு வழியில், பிறர்க்கு உதவுதல.

22. சோலை வைத்தல் (ஊர் செழிக்க மரம் நட்டல்)

23. திருமணம் செய்வித்தல்.

24. விலங்குகளுக்கு உணவளித்தல்.

25. இரப்போர்க்கு ஈதல் (யாசிப்பவர்க்கு உணவளித்தல்).

26. அறுவகைச் சமயத்தவர்க்கும் உணவு அளித்தல்.

27. திருக்கோயில் கட்டுதல்.

28. மருந்து கொடுத்தல்.

29. பாடம் படிப்போர்க்கு உணவு அளித்தல்.

30. குளம் வெட்டுதல்.

31. ஊர்க்கேணி வெட்டுதல்.

32. விளக்கு வைத்தல் (மின்சார வசதி செய்தல்).

ஆகியனவாகும்.

மேற்சொன்ன அறங்களுள் மிகவும் சிறந்தது 25, 26ல் கூறப்பட்டதாகும். எது ஒன்றையும் ஒருவன் போதும், என்று சொல்வதில்லை. ஆனல் மிகுந்த அறுசுவை உணவு உண்டதும், மிகுந்த திருப்தியுடன் போதும் என்று சொல் வதிலிருந்து அதைவிட சிறநத தருமம் எதுவும் இல்லை எனத்தெற்றென விளங்கும்.

## வழக்கொழிந்து நிம்மதி தேட:

நீதிக்குக் கால்கள் இல்லை. சமூகத் துக்குக் காதுகள் இல்லை. இந்நிலையில், வாழ்க்கையில் போராடித் தவிக்கும் மனிதன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவும், தன் தேவைகளைப் பூர்த்தி செய்யவும், தன் நலனுக்கு என்று இன்ன பிறர்பால் சந்தேகம் கொள்கிறுன். சாடு சொல்கிறுன்; வழி வழியான குலப்பெருமையைப் பேசுகிறுன்; மற்றவர்களை செல்வத் தால் வாயடித்துவிடுகிறுன்; இல்லை வழக்குத் தொடர்கிறுன். வெற்றி பெறுவது சாத்தியமா என்பதைக் கரு தாது ஒருவித பழி உணர்ச்சிக் காரண மாய் மேன்மேலும் அதனைத் தொடர அதிகப் பொருள் செலவழிக்கிறுன். ஊரார் தூற்ற சட்டத்திற்கு மதிப்புக் கொடுத்து எங்கேயோ பொருளைக் குவிக்கிறுன். இறுதியில் வழக்கும் வெற்றி பெருது இருந்த பொருளும் கரைந்து வாழவே தவிக்கிறுன். ஆகை யால் கூடுமான வரையில் வழக்காடிச் செய்யும் செயலைவிட சமாதானமாய்ப் பிரச்னைகளைத் தீர்ப்பது பெரும் பயனை விளைவிக்கும். பகைவர்களை சம் பாதித்துக்கொடுக்காது; பகைவிளைவிப் பவனும் திருந்திட அவர்களையும் நண்ப ராக்கிக் கொள்ள வைக்கும் ஒரு சிறந்த தானம் சமாதானம்.

ஒரு நிமிஷப் பொறுமை பதது ஆண்டு களுக்கு நன்மை—கிரீஸ

உன்னல் அடிக்க முடியாத கையை முத்தமிடு—ருமேனியா

கேள் பார் மௌனமாயிரு—ஸ்பெய்ன்.

He who knows not and knows not that he
Knows not is a fool shun him. But he
Who knows not and knows that he knows not
Is a wise man Follow him.

*—Eastern Proverb*

ஆகவே நாம் பகைவர்களைச் சம் பாதித்துக் கொள்ளக் கூடாது. மீறி எதிர்ப்பு உண்டாயின் என்ன செய் வது? வம்புக்கே போகாதவர்களுக்குத் தான் வாழ்க்கையில் பிரச்னைகள் அதிகம், அவர்களுக்குத்தான் சோதனை கள் அதிகம். அவர்களை இந்த சமூகம் அடிக்கடி பட்டை தீட்டிப் பார்க்கும்.

அளவுக்கு மீறிய நல்லவனுக்குத் தான் அளவுக்கு மீறிய ஆபத்துக்களும் உண்டு.

(அடுத்த இதழில் முடியும்)

## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறை வேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்க லாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுரு வம் பதித்த சுமார் 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அது மட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.

# திருமலையில் ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் பிரம்மோற்சவம்

## (22-9-79 முதல் 30-9-79 வரை)

ஒவ்வொரு நாடும் தங்களுக்கென்று ஒரு தனிப்பட்ட கலாச்சார பின்னணியைக் கொண்டு விளங்கும். நாடுகளின் பெருமை அக்கலாச்சாரத்தின் மீதே சார்ந்திருக்கும். ஆனால் மற்றைய நாடுகளைவிட மனிதன் திருந்திட, மனயமைதியுடன் வாழ்ந்திட அதனாற்றான் அவன் வாழும் சமுதாயம் சீர்மை பெற்றிட வழி வகுக்கும் வகையில் சீர்மை கொண்டு விளங்குவது நமது பாரதக் கலாச்சாரமேயாம். ஏனெனில் அது, சமயத்தின் மேல் கட்டப்பட்ட கருங்கல் கட்டிடமாகும். இன்று இந்தியா வறுமையில் உழன்றாலும், அவன் சிந்தனையில், பரந்த மனப்பான்மையில் நல்லுணர்வுகள் தழைத்தோங்கி இருப்பதற்குக் காரணம், அவன் சார்ந்துள்ள இந்து சமயம் புகட்டும் தத்துவக் கருத்துக்களேயாம். இனத்தால், நிறத்தால், இன்று இந்தியர்களிடையே நிலவும் பல பிரிவுகள் ஓசை எழுப்பினும், இந்து சமயம் என்ற ஒரு பேரோசையின்கீழ் அது அமுங்கி விடுகிறது. இத்தகு பெருமை மிகு சமயத்தின்கீழ், பல்வேறு



[illegible] பல்வேறு உருவ வழிபாடுகளை மக்கள் அமைத்துக் கொண்டாலும் "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" எனும் அமுத மொழிக்கு சாட்சியாக, நாட்டின் எந்த மூலையில் நடைபெறும் எந்தச் சமய விழாவாயினும் சரி, குமரி முதல் இமயம் வரை எல்லாப் பிரிவினையும் சார்ந்த மக்கள் பங்கேற்று வருகின்றனர். இதற்கு உதாரணமாக வருடந்தோறும் திருமலையில் நடைபெறும் பிரம்மோற்சவமாகும்.

இவ்வகையில் [illegible] இறைவனுக்கும் அடியார்க்கும் தொடர்பு விழாக்களை [illegible]. இவ்வகையில் எடுக்கப்பட்ட விழாக்களில் மிகப் பழமையான விழா பிரமோற்சவமாகும். சாந்திரமானத்தைச் சார்ந்த ஆசுவயுஜ மாதத்தில் அதாவது தமிழ் மாதம் புரட்டாசி பிற்பகுதியில் நவராத்திரி விழாவின் போது இவ்விழா ஒன்பது நாட்களுக்கு நடைபெறும். மூன்று வருடங்களுக்கு ஒருமுறை அதிகமாதம் வருவதால், அப்போது பாத்ரபத மாதத்தில் அதாவது தமிழ் ஆவணி மாதத்தின் பிற்பகுதியில் இப்பிரமோற்சவம் இரண்டாவது முறையாகவும் நடத்தப்படும். அதுபோது வெள்ளி ரதத்தில் இறைவன் திருவீதி வலம் வருவார்.

ஒவ்வொரு நாளும் விழாக்கோலம் கொள்ளும் திருமலை, பிரமோற்சவத்தின் போது பக்திப் பெருங்கடலில் மூழ்கி, கோவிந்த கோஷத்தில் தோய்ந்து வேத மந்திரங்களில் கலந்து ஹோமப் புகையில் மறைந்து தன்னை மறந்து விடும். இத்தகு பெருமையுடன் விளங்கி, எண்ணற்ற பக்தர்களைக் கவரும் திருமலையில் நடக்கும் இப்பிரமோற்சவத்தின் ஆதி வரலாறு என்ன என்பதைச் சற்றே நோக்குவோம்.

### புராணச்சான்று:

வேங்கடாசல மஹாத்மியத்தில், பிரமன் தன் விருப்பப்படி, மற்றைய கடவுளர்கள், தேவர்கள் மனிதர்கள் முனிவர்களில் ஸ்ரீவேங்கடேஸ்வரருக்கு மிக ஆடம்பரமாக



**ஆனந்த நிலையம்**

இபபிரமமோற்சவததை நட ததியதாகக கூறபபடுகினறது அனறு தொடடு இனறு வரை அதன பெருமை மஙகாவணணம இவ விழா தொடாநது கொணடாடபபடுகினறது பிரமமாஇவவிழாவினைச சிறபபுற நடததியது பறறிய முழுச செயதி, வேஙகடாசல மஹாத மியததில 19-வது அததியாயமான வராஹ புராணததில காணககிடககினறது கலியுகத தில ஏறபட்டுள்ள தீமைகளை அழிதது, உல கததைக காபபாறற பிரமமன, முனிவாகள ஆகியோரின வேணடுகோளுககிணஙகி ஸ்ரீநிவாசனஇவவேழுமலைகளில எழுநதருளிய தாகவும அதனால மகிழச்சி கொணடு பிரம மன் இவவிழாவை நடததியதாகவும தெரிய வருகினறது,

வரலாற்றுச் சானறுகளினபடி இபபிரம மோற்சவததின வரலாறுவது:

திருமலையின கோயில சுவாகளில உளள பல கலவெடடுகளில-பல காலததால மறைந தும அழிநதும விடடன-கோயிலின முதல பிராகாரததின வடககுச சுவரில உளள முககிய கலவெடடு கூறுவதாவது.

ஸவஸதஸ்ரீ கொபபாதரு பன மறகு யாணடு கச-வது சகதி விடஙகநாகிய ஸ்ரீகாட படடிகள பெறககடையாா மகள **சாமவை** யாகிய **காடவன பெருநதேவி,** ஸ்ரீவேஙகடததுு எழுநதருளி நினற பெருமானடிகளுககு . . . கொணடருளி வெளளியால எழுநதருளு விதத மணவாளப பெருமாளுககு **மாாகழி திருததுவாதசிககு** திருககொடி ஏறறதது திருமுளை அட்டி **ஏழு நாள** திருவிழா இரணடு பொழுதும எழுநதருளிவிபபதறகு வைதத பூமி வெஙகடக கொட்டத்து திருககட ஆர் நாடடு திருசசுகனூா சபையாாகும் தேவாககும பொன குடுதது இறை இழிதது . . . . சநதிராதிதத வரை செலலதாக குடுததோம சாமவையாகிய காடவன பெருநதேவியென''

பல்லவ அரசைச சாாநத **சாமவை** எனற **காடவன பெருநதேவி** இளவரசி, இறைவனுககு மாாகழி மாதததில ஏழு நாள விழா எடுதத தாகவும, மேலும இறைவனுககு அவவிழா நடததபபொனனும, பொருளும கொடுதத தாகவும, இவவிழா, உலகில சூரிய சநதிரா இருக்கும வரை நடததபபட வேணடும எனறு விருமபியதாகவும மேறகணட குறிப பிலிருநது தெரிய வருகினறது. இவவிழா விறகாகச **சாமவை,** வெளளியில மலைய குனறபெருமாள எனற ஸ்ரீநிவாசரின விகர கததைச செயது கோயிலில பிரதிஷ்டடை செயததாகவும, இறைவனுககு விலையுயாநத கல வைதத கிரீடமும, மாலையும மேலும பல பொன ஆபரணஙகளையும ாநததாகவும தெரிகிறது. **சாமவை** நடததிய இவவிழா இரணடாவதாகும். முதல பிரமமோறசவ விழாவைப புரடடாசி மாதததில நடததிய தாகவும மறறொரு குறிபபிலிருநது அறிய முடிகினறது. டாகடா. எஸ. கிருஷண சுவாமி ஐயஙகாா அவாகள தனனுடைய 'திருபபதி வரலாறு' (History of Tiiupati) எனும நூலில, சாமவையின காலததைப பலலவ மனனவனான தணடிவாமன காலத துடன இணைதது நிறுவுவதால, சாமவையின காலம கி. பி 7-ஆம நூறறாணடின பிற பகுதி அலலது கி. பி 8-ஆம நூறறாணடின முறபகுதி எனறே துணியலாம.

கி.பி. 13-ஆம நூறறாணடைச சாாநத கல வெடடுச சானறுகளிலிருநது, கி. பி. 10-ஆம நூறறாணடில, புரடடாசி, மாாகழி மாதங

களில மட்டுமினறி ஆடிமாதததிலும திருமலை யில ஸ்ரீவேஙகடேஸவரருககுத 'திருககோடித திருநாள' எனற பெயரில மறறுமொரு பிரம மோறசவம நடநது வநததாகத தெரிய வருகினறது. கி பி. 12-ஆம நூறறாணடில ஸ்ரீ ராமானுஜரின உததரவினால, இறை வனுக்கு மறறுமொரு பிரமமோறசவம நடந தாக, இராமானுஜரின பகதரான அனநத ராயா எழுதிய 'ஸ்ரீ வேஙகடாசல இதிஹாச மாலை' எனும நூலின மூலம அறிய ஏதுவா கினறது. விஜய நகரப பேரரசு காலததில இரணடாவது ஹரி ஹரா எனும அரசன (1344-1404) முலலை திருவேஙகட ஜீயா என பவரைக கொணடு, மாசி மாதததில இறைவ னுககுத திருமலையில மற்றொரு புதிய பிரம மோறசவம் நடததியதாகச சிலசானறுகளின மூலம அறிய முடிகினறது. இவவாறாக கி.பி 16-ஆம நூற்றாணடின இறுதிவரை, மாதம ஒனறிறகு ஒரு விழா வீதம, ஆனி, வைகாசி மாதஙகளைத தவிரதது, இறைவனுககு ஆண டொனறுக்குப் பதது பிரமமோறசவஙகள நடததபபடடு வநதன எனறு கூறலாம. காலப்போககில மறற விழாககள நிறுததப படடு ஸ்ரீவேஙகடேஸவரரின பிறநத நாளான சிரவண தினத்தில முடியும புரடடாசி மாதததில் மட்டும பிரமமோறசவ விழா கொணடாடப்பபடடது.

கி.பி. 19-ஆம நூறறாணடின முறபகுதியில இபபிரம்மோறசவம எவவாறு கொணடாடப பட்டது என்ற செயதியும சேகரிககபபடடுள ளது இநதியா, ஆங்கிலேயரின ஆடசியில இருநதபோது, அப்போதைய ஆநதிரப் பிர தேசம சித்தூா மாவட்ட கலெகடா திரு ஜியாாஜ் ஸ்ரேட்டான் எனபவருக்குக கிழக கிநதியக கமபெனி, திருமலை கோயில பறறிய முழுச செயதியினைச சேகரிககுமாறு உததிர விடடது. 1803 ஆணடைச சாாநத அக கலெகடரின செய்தித்தொகுபபான "சவால-ஏ-ஜவாப" அபபோது நடநத பிரமமோற சவததைப்பறறிய முழு விவரங்களை நனகு விளககியுளளது.

ஆகவே, இபபிரமமோறசவம எபபொழுது யாரால முதன முதலாக ஆரமபிக்கப்படடது என்பதைப பறறிய அதிகாரப பூாவமான சானறுகள கிடைககவிலலையாயினும, இவ விழா பனனெடுங்காலமாகக கொணடாடப பட்டுச சுமாா 10 நூறறாணடுகளாக பகதா களை வெகுவாகக கவாநது வருகின்றது எனபது தெளிநத உணமை

இப்பிரமமோறசவத்தினபோது இறைவன அமாநதிருநது திருவீதி வலம வரும வகையில பல வாகனங்கள் பயன்படுத்தப்படடு வரு



ஹம்ஸ வாகனம்

கின்றன ஆனால இவ்வாகனஙகள் சில தத் துவககருத்துககளைக கொணடு விளஙகுகின்றன. யானை, குதிரை, பல்லாககு, ரதம போன்ற வாகனஙகள பயனபடுததுவற்குக் காரணம, இறைவன ராஜாதிராஜன எனபதைக காட் டவே. இவவணடம முழுவதையும தன ஆட்சியின கீழ கொணடு அருளாடசி புரியும ஜகதீஸவரன எனபதைக கூறவேயாகும.

இபபிரமமோறசவம பத்து நாடகள கொணடாடப்பட்டாலும, முதல நாள அவ வளவாக, எவ்விதச் சிறபபுமின்றிக கடநது விடும முதல் நாள அஙகுராாப்பணம நாள எனறு அழைககபபடும. அன்று மாலை விஷவக சேனர் என்று அழைக்கபபடும சேனை முதலியாா எழுநதருளச் செய்வாா. யாக சாலைககான புனித இடததைத்தேர்நதெடுகக

அனறு அவா திருமலேயின நானகு வீதிகளில எழுநதருளுவாா அவவிடத்தில ஒவவொரு நாளுககுரிய ஹோமம ஆரமபிககபபடும விழாவிறகுரிய எலலா ஏறபாடுகளேயும அவா மேறபாாவையிடடு, அடுதத நாள ஆரமப மாகும விழாவிறகு எலலாக கடவுளாகளேயும அவா அழைபபாா திருமலேராய மணடபத தில அளிககபபடும மரியாதையை ஏறறுக கொணடபின, அவா அனநதாழவாா, கருடாழவாா, சுதாஸனா ஆகியோருடன யாக சாலேககுச செலவாா

அடுததநாள முதற்கொணடு அடிபபடை விழா ஆரமபமாகும. இதைக குறிககும வகை யில தூய ஆடையில ஓவிய நுணுககங்களுடன கருடனின உருவம தீடடபபடட கருடத துவஜம் எனும கொடி இறைவனின கொடி

சிம்ஹ வாகனம்





கல்ப வ்ரு

மரத்தில ஏறறபபடும இபபோது விலே யுயாநத பொன்னுபரணஙகளால அலஙகரிக கப்படடு வஜரகவசம மலாமாலேகள அணியப பெறற இறைவனின உறசவமூாததியான ஸ்ரீமலேயபபசுவாமி தன இரு தேவியாகளான ஸ்ரீதேவி, பூதேவி ஆகியோருடன தஙகத் திருசசியில(வாகனம) திருமலேராய மணடபத திறகு எழுநதருளவாா குறிபபிடட நன முகூாததததில, வேதஙகள முழஙக, நாதஸ வர இனனிசை எஙகும பரவத தலேமை அர்ச சகரால் கருடதவஜ கொடி கொடிமரத்தில ஏறறப்படடு, ஆகம விதிப்படி, அககொடி மரத்தில சுறறபபடும இவவிழா நனமுறை யில நடககத தெயவீகச் சிந்தனேககு எவவித இழுககும நேராவணணம பாதுகாககக எட்டுத திககுப் பாலாகளுககும உத்திர விடப்படும.



நக்ஷ வாகனம்

இவவாறு ஆரமபிககப்படும இவவொனபது நாள விழாவினபோது, இறைவன் பல்வேறு வாகனங்களில காலேயிலும, மாலேயிலும திரு வீதி வலம வருவாா இனனினன நாட்களில இநதநத வாகனஙகளில இறைவன எழுந தருளுவாா எனபதறகு எவவிதமான ஆகம விதிகளோ அலலது வரையறைகளோ இலலே. இப்போது உளள வாகன முறைகள, அவவப போது வந்த அடியாாகளின விருபபுடன செயத ஏறபாடுகளேப பொறுததே வழககில இருந்து வருகினறன பிரமமோறசவத்துடன இணேநத மறறுமொரு குறிபபிடட நிகழ்சசி யும கல்வெடடுகளில காணபபடுகினறது. விழாசசெய்தியினே எங்கும தெரிவிககுமவகை யில, கோயிலமுன அதிா வெடிகளே வெடிக கும பழககம இருநது வநததாகத தெரிய

வருகின்றது. கி.பி. 1583 ஆம் ஆண்டைச் சார்ந்த ஒரு கல்வெட்டின் மூலம் எட்டூர் திரு மலே நம்பி குமாரதாத்தாச்சாரியார் என்ப வர் 20 ரேகை பொன் செலவில் **பெருலி பாணம்** என்ற ஒரு வெடியை நன்கொடை யையாகக் கொடுத்ததாகத் தெரிய வருகின் றது. ஆனல் 'அதிர்வெடி' என்று எங்கும் குறிக்கப்படவில்லேயாயினும்போர்ச்சுகீசியர், டச்சுக்காரர்கள், பிரஞ்சு நாட்டினர், ஆங்கி லேயர் ஆகியோர் இந்தியாவுக்கு வந்த பிறகு தான் இத்தகு வெடிகள் தென்னிந்தியாவில் வழக்கில் பரவலாக வந்தன.

இவ்விழாவை பிரம்மா ஆரம்பித்து வைத்த தாகப் புராணங்கள் செப்புவதால், அதன் அடையாளமாக, ஒவ்வொரு நாளின் வாகன உற்சவங்களின் போதும் பிரம்ம ரதம் எனும்

**சர்வ பூபால வாகனம்**





# திருமலையில்

# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி

# பிரம்மோற்சவம்

**உற்சவ விவரங்கள்**

| தேதி | கிழமை | பகல் உற்சவங்கள | இரவு உற்சவங்கள் |
|---|---|---|---|
| 22—9—79 | சனி | — | சேனைபதி உற்சவம், அங்குரார்ப்பணம் |
| 23—9—79 | ஞாயிறு | வஜ்ரகவசத்துடன் திருச்சி உற்சவம் துவஜாரோஹணம் | பெரிய சேஷ வாஹனம் |
| 24—9—79 | திங்கள் | சிறிய சேஷ வாஹனம் | ஹம்ஸ வாஹனம் |
| 25—9—79 | செவ்வாய் | ஸிம்ஹ வாஹனம் | முத்துப்பந்தல் வாஹனம் |
| 26—9—79 | புதன் | கல்பவிருக்ஷ வாஹனம் | சர்வபூபால வாஹனம் |
| 27—9—79 | வியாழன் | பல்லக்கில் மோகினி அவதாரம் | மகரகண்டிகை ஸ்ரீலக்ஷ்மி ஹாரம் ஆகிய ஆபரணங்களுடன் கருட வாஹனம |
| 28—9—79 | வெள்ளி | ஹனுமநத வாஹனம் [மாலை-வசந்தோற்சவம்] | கஜ வாஹனம் |
| 29—9—79 | சனி | ஸூர்யப்பிரபை வாஹனம் | சந்திரப் பிரபை வாஹனம் |
| 30—9—79 | ஞாயிறு | ரதோற்சவம் | குதிரை வாஹனம் |
| 1—10—79 | திங்கள் | பல்லக்கு உற்வசம், அவப்பிரதோற்சவம் (சக்கர தீர்த்தம்) | திருச்சி, துவஜாவரோஹணம் |

ஒரு சிறு ரதம (வெறறுரதம) வாகனஙகளின முன இழுததுச செலலபபடும இதனுடைய மறறொருப பினனணி எனனவெனின, இவ விழாவினபோது பிரம்மன திருமலையிலதஙகி. விழா நனமுறையில நடக்க அவா மேற பாாவை புரிவதாகப பொருளபடும. முதல நாள இரவின போது மலையப்பசுவாமி தன இரு தேவியாருடன் ஏழு தலைகளைககொணட பெரிய சேஷ வாகனததில திருவலம புரிவாா.

முதல வாகனமான சேஷவாகனம, பரம பததில பளளி கொணடிருககும பரமபொருளுககு எபபோதும சேவை புரிநது கொணடிருககும பாமபின நித்ய கைங்காய பெருமையினைப பறைசாறறும். இது மககளுககுத் தேவையான இடைவிடா இறையுணாவை உணாத்தும.

இரணடாம நாள காலையில நடததப்படும சிறிய சேஷ வாகனததில மலையபபசுவாமி மடடும எழுநதருளுவாா. அனறு இரவு இறைவன, அனன வாகனமான ஹமஸ வாகனததில திருவீதி வலம புரிவாா

முனனொரு காலதது, அரககன ஒருவன பிரமமனிடமிருநது வேதஙகளை கவாநது செலல, பினனா பிரமமா ஆதிகேசவனிடம முறையிட,அவருககு உதவும வகையில இறைவன அனனபபறவை உருவம கொணடு அரககனை அழிதது வேதஙகளை மீடடுக கொடுததான. இறைவன தனககுப புரிநத அருட்திறததை நினைவிறகொணடு பிரமமா இவவனன வாகனததை வழககில கொணடதாககக கூறபபடுகிறது. இது (அன்னபபறவை வாகனம) தனனைச சரணடைநதாாககு விரைவில அருள தருவான எனபதையும வலிமையுடையாககும பரமபொருள தான கதி எனபதையும கூறுகினறது. அனறு இறைவனை வழிபடடால அவாகளுடைய ஹிமசைகள (துனபஙகள) மறைநது விடுமெனறும நமபபபடுகிறது. அனறு இறைவன சரஸவதி அவதாரம புனைவாா. மூனறும நாள காலை இறைவன சிமஹ வாகனததிலும, இரவு முததுககளால அலங்கரிககபபடட முததுபபநதலிலும வலம வருவாா மிருகஙகளுககெலலாம தலைவனாகவும மிருகஙகளிடையே வீரம பொருநதியதாகவும எபபடி சிஙகம் எனும விலஙகு விளஙகுகின்றதோ அதேபோனறு உலக ஜீவராசிகளுககெலலாம தலைவனாகவும், எலலாவறறையும விட சாவ வலலமைபபடைததவனாகவும சாரஙகன விளஙகுகினறான என்பதைக் காடடவே, உறசவததினபோதுசிம்ஹ வாகனம பயனபடுததபபடுகிறது. மனிதர்களின துனபஙகளைபபோககி, முழுவதுமாகத தனனைச் சரணடைந்தாாககு அருள்புரிய,



கருட வாகனம்

இறைவன இவ ஏழுமலைகளில, தேவாகளின வேணடுகோளுககிணஙகி எழுநதருளியுளளான. இதனைககுறிககும வகையில நானகாம நாள காலை, கேடடதைககொடுககும கலப விருக்ஷம வாகனததில திருவீதிவலமவருவாா. அனறு இரவு தஙகததகடுகளால வேயபபடட விமானததைக கொணட சாவ பூபால வாகனததை மேறகொளவாா. இவவாகனம 7 அடி உயரம கொணடு, தங்கத தகடுகளால போாததபபடடிருககும. இரவில விளககுகளின் ஒளியால இவவாகனம பளமடஙகுஒளிா விட, வாகனததின நடுவில மலையபபசுவாமி விலையுயாநதஆபரணஙகளைஅணிநதுகொணடு காடசிதரும் அழகு கணகளுககு விருந்தாகயமையும. அடுதத நாள காலை உறசவத்தின போது இறைவன மோகினி அவதாரம் புனைவாா. இதுபோது சரிகை வேலைப்பாடுடைய

—டுத் துணிகட்டப் படையாகச் கொண்டு ருத்திரர்கள் உதித்த வைரகத்து ஏறு ஆக த்ததியை அணிவார் சாதுக்களில் வைரத் தொடுகா மின்ன சங்கு. சக்கரம் ஏந்திய கைகளில் போன தாமரை மொட்டுக்கள விளங்குப. இத்திருக் கோலத்தில 'அவன' ஆகிய இறைவன 'அவள்' ஆகமாறி. பந்தி ஒரு நாள தேவாகளுக்கு அமிர்தம வழங்க. மோஹினி அவதாரத்தில தோன்றிய இறைவனின அழகிய கோலத்தில மயங்கிய அரக்கா களைப் போன்று, பெண வேடம பூண்ட இறைவனின அலங்காரக் கவர்ச்சியில பக்தாகள தங்களை மறந்து தெயவ சிந்தனையில தோயவா எனககூறின அது மிகையாகாது. நோவழியில நடப்பவாக்கும நறசெயலுக்கும, தீமையை அழிக்கவும இறைவன என்றும துணை புரிபவான என்பதைப் பக்தாகளுக்கு.

கஜ வாகனம்



மோகினி அவதாரம பூணயும காடசி கூறுமல கூறுகின்றது. பிரமமோறசவ விழாவிற்கு மேலும் சிறப்பு சோககும வகையில, அனறு இரவு இறைவன, தனககுப பிடிதத கருட வாகனததில திருவீதிவலம் வருவாா. அது போது திருமலை பகதிக கோலம பூணடு, மககட கடலாக விளஙகும. மொழி, இன வேறுபாடு இனறி, மககள அனைவரும ஒனறு கலநது, பகதியின விளிமபிறகே செனறு விடுவா. அனறு இரவு கருடவாகனததில அமரும மலையபப சுவாமி, அனறு மட்டும அரிதாகப பயன படுததததபபடும லக்ஷமீ ஹாரம, மகர கணடிகை என்னும் விலை யுயாநத ஆபரணஙகளை அணிவாா. மேறகூறிய ஆபரணஙகள, பிரமமோறசவததின கருட சேவையனறுதான கோயில கருபபக கிரகத திலிருநது வெளிக கொணரபபடும. அனறு அவவணிகளை மூலவரின திருமேனியினினறு மிகவும பயபகதியுடன கழறறித தங்கததட்டு களில வைதது, மலையபபசுவாமியின மற றைய அலஙகாரஙகள முடிநத பிறகு, இனனிசை தொடர அவறறை வாகன மணட பததிறகுக கொணடு வருவா. இவவாறு அவவரிதான அணிகலனகளை அணிந்து, அருள்பொழியும் இறைவனை அனறு தரிசிப் பவாகள பேறு பெறறவாகளதாம. கருடத் துவஜன எறைழைககபபடும மகாதேவனுககு, நல்லோரைக காபபாறற தான விரைநது செலல ஒரு வாகனமாக கருடன விளஙகியது. ஆகவே இஃது இறைவனுககு உகநததால் கருட வாகனம பயன படுத்தப்படுகிறது.

அனறு இரவு இறைவன கோயிலுககுத் திரும்புவதறகுள் பொழுது புலாநதுவிடும. விரைவான சமயச சடஙகுகளுககுப பிறகு, அனறு காலை (ஆறுவது நாள) இறைவன் சிறிய திருவடியில அதாவது ஹனுமநத வாகனத்தில எழுநதருளுவாா. தலைவனையே தன இறைவனுககக கொணடு, காலம முழுவதும் தொணடு ஒனறினையே கடமையாகக் கொணடு ராமாவதாரத்தில பகதிககு ஓா இலககணமாக விளங்கிய அனுமனின சேவையினையும, ஆறறலையும நினைவு கூறும வகையில அனுமன வாகனம விளங்குகிறது. அனறு மதியம இறைவன தன இரு தேவியருடன மேறகு மாடவீதியில உளள வசநத மணடபத்திறகு எழுநதருளுவாா. அஙகு அவருககு மணமிக்க நீரினால திருமஞ்சனம அலலது அபிஷேகம் நடைபெறும. இதுவே வசநதோறசவமாகும. மாலை கோயிலுககுத திரும்பியபின, அனறு இரவு இறைவன யானை வாகனததை அலஙகரிப்பாா.

(38-ம் பக்கம் பார்க்க)

# நம்மாழ்வார் வைபவம்

## திரு அவதார க்ரமம் :

தமிழ் நாட்டில் முன்புள்ள பாண்டிய நாட்டில் தாமிரபரணி நதிக்கரையில் திருக்குருகூர் என்ற அழகுமிக்க ஒரு ஊர் உண்டு. அங்கு மறந்தும் புறந்தொழாமே குடி வந்து ஆட்செய்யும் வேளாளர் குலத்திலே ஏழாட்காலம் பழியற்ற ஒரு குடும்பம் உண்டு. திருவழுதி வள நாடார் என்பவர் ஒருவர் தம் குலத்தொழில் செய்து கொண்டு விளங்கினர். அவர் பிள்ளை அறந்தாங்கியர். அவர் குமாரன் சக்ரபாணியார், அவர் பிள்ளை அச்யுதர். அவர் பிள்ளை செந்தாமரைக் கண்ணன் என்ற திருமால் நாமத்தை பூண்டிருந்தார். அவர் பிள்ளை செங்கண்ணன், அவர் பிள்ளை பொற் காரியார். அவர் பிள்ளை காரியார், அவர் பிள்ளை மாறன் என்ற திரு வம்சத்திலே வந்தவர்கள்.

பொற்காரியார் தம் புத்ரனை காரியாருக்கு திருவண் பரிசாரத்திலுள்ள திருவாழ்மார்மன் புத்ரியான உடைய நங்கையாரைத் திருமணம் செய்விக்க, காரியாரும் தமது பத்னியுடன் இனிது இல்லறம் நடத்தி வந்தனர். அவர் ஒருதடவை தம் பத்னியை பிறந்தகம் அழைத்துப் போய் மீண்டும் வரும் போது திருக்குறுங் குடியில் எம்பெருமானை ஸேவித்து, புத்ர சந்தானம் தந்தருளுமாறு வேண்டி நிற்க எம்பெருமானும் "நாமே வந்து பிறக்கிறோம்" என்று அர்ச்சக முகத்தாலே வரப்ராதனம் செய்தனர். உடைய நங்கையார் கர்ப்பவதியாகி எம்பெருமான் சேனை முதலியார் அம்சமாக நம்மாழ்வார் அவதரித்தனர்.

## அவதரித்த காலம் :

கலியுகம் பிறந்த நாற்பத்து மூன்றும் நாள் பஹுதான்யஹு வந்த ருதுவில்



வைகாசி மீ சுக்ல பக்ஷம் பௌர்ணமி கூடிய திரு விசாக நக்ஷித்திரத்தில் கர்க்கட லக்கினத்தில் திவ்ய யோக திவ்ய கரணங்களில் வகுள பூஷணத் துடன் அவதரித்தார். திருவனந்தாழ் வாரும் திருப்புளியாழ்வாராய் வந்து அவதரித்தார்.

## அவதார காலத்தில் ஆழ்வாரின் நிலைமை :

தாய் முலையுணுமலும், மௌனத் துடனும் வாட்டமின்றி பரிபூர்ணமாயிருக்கிற குழந்தையைக் கண்டு தாய் தந்தையர்கள், காரியாரும் உடைய நங்கையாரும் பொலிந்து நின் பிரான் திருமுன்பே கொண்டுபோய் ஸேவிக்கப்

**வி. கே. ஸ்ரீநிவாஸன்.**
சென்னை-45.

பண்ணி திருப்புளியடி ஆழ்வார் அடியிலே சிறு பொற் தொட்டிலில் விட்டு பகவானை வழிபட்டு வந்தனர்.

## ஆழ்வார் கண் விழித்துப் பேசியது :

மதுர கவிகள் வடநாடு சென்று அயோத்தியில் இருக்கும்போது தென் திசையில் தினமும் இரவில் ஒரு தெய்வீக சோதி தோன்ற அவர் அதை அறிய தெற்கு நோக்கி, பகலில் தூங்கியும் இரவில் நடந்தும் அந்த சோதியை நோக்கி வந்தனர். திருவரங்கத்துப் பெருமானை வழிபட்டு, அங்கும் தென் புறம் சோதி தோன்ற விரைந்து திருக்குருகூர் சென்று, அப்பால் தெரியாமையால் அதுஇங்கேதான் இருக்கக் கூடும் என்று நினைத்து, உறங்காப்புளி அடியில் பூர்ண சந்திரனைப்போன்று பத்மாசனத்தில் மௌனியாக எழுந்தருளியுள்ள ஸ்ரீபாராங்குசனைப் பார்த்து இவருக்கு செவி கேட்குமோ என்று அறிய ஒரு சிறு கல்லை அவர் முன் சற்று தூரத்தில் போட அவர் கண் மலர்ந்து கடாக்ஷித்தனர். இவருக்கு வாக்குண்டோ என்பதையறிய "செத்தத்தின் வயிற்றில் சிறிது பிறந்தால் எத்தைத்தின்று எங்கே கிடக்கும்" என்று கேட்ட, அவர் அத்தைத் தின்று அங்கே யிருக்கும் என்று கூறினர்.

மதுர கவிகளும் ஆழ்வார் திருவடிகளில் வணங்க 'மேவினேன அவன் பொன்னடி மெய்ம்மையே' என்று அர்ச்சிக்க, உடனே நம்மாழ்வார் பரீதி உள்ளடங்காமல் ருக், யஜுஸ், அதர்வண வேதங்களின் என்ற வேதஸாரத்தை திருவிருத்தம் திருவாசிரியம், திருவந்தாதி என்ற பிரபந்தங்களாக வெளியிட்டார். ஸாமவேத சாரமான சர்ம பிரபந்தத்தை திருவாய் மொழி என்ற பிரபந்தத்தை வெளியிட்டார். மதுரகவிகள் போன்ற ஸஜ்ஜனங்கள் மூலம் பிரகாசிக்க அனுக்ரகித்தார்.



# திருமலை ஒழுகு

சாளுவ நரசிம்மன காலத்தில், மக மதியர் கலகம நேர்நதது. அப்போது தான் கோவிநதராஜா, ஆழ்வாா, எம்பெருமானுர்களோடு, திருவேங் கட முடையானும், பாபவிநாச தீர்த் தத்திற்கு அருகில் ஒரு மறைவானகுகை யில் வைக்கப்பட்டதால்அங்கு ஓராண்டு திருவாராதனம் கொணடரு ளினர்கள். பாமினி இராஜ்யத்துச் சுல்தான் மூன்றும் மகமதுஷா என்பவன் கி.பி. 1483—84-ல் விஜயநகர இராஜ்யத் தைக் கைபற்றப் படையெடுத்து வந்த போது இச்செய்தி நிகழ்ந்திருத்தல் வேண்டும். அப்போது சாளுவ நரசிம் மன், பெரிய பெருமாளின் பாது காப்புக்காகக்கல்வேலியொன்று கட்டி வைத்தான் என்பது தெரிகிறது. அக்கல் வேலி எது என்று இப்போது புலனுகவில்லை.

## தாளப்பாக்கம் பாடகர்கள்

தாளப்பாக்கம் பாடகர்கள் நந்தவ ரீக பிராமணர்கள். பாரத்வாஜ கோத்திரமும் ஆச்வலாய சூத்திரமும், ரிக் சாகாவும் உடையவர்கள். இவர் களுள் முதன்மை யானவர் அன்ன மாச்சாரியார். இவர் தமது பதினுறும் பிராயம் தொடங்கி (கி.பி. 1424) 92-ம் வயதுவரை திருவேங்கட முடை யானைப் பாடி, பத்தி நெறியை இன்னிசை மூலமாய்ப் பரப்பினவர். இவர் இளமையிலே (16-ம் வயதில்) திருவேங்கடமுடையானை ப்ரத்தியட் சமாகக் கண்டு அவர் அருள் பெற்ற வர்.கந்தாடைஇராமாநுஜ ஐயங்கார் இவர் காலத்தினரே. அத்யாத்ம சங் கீர்த்தனலு,சிருங்கார சங்கீர்த்தனலு, சிருங்கார மஞ்சரி என்னும நூல்களைப் பாடினுர். இப் பாட்டுக்கள் எல்லாம் பக்திச்சுவை நனிசொட்டச் சொட்ட அமைந்திருக்கின்றன. இவற்றைச் செப்பேடுகளில் அழகான தெலுங்கு எழுத்தில் எழுதி வைத்திருக்கிருர்கள். இவர் திருமகனுராகிய பெத்த திரு மலாச்சார்யர் என்பவரும் பல பாட்டுக் களை எழுதிவைத்துள்ளார இப் பாடல் கள்,இலக்கியமாகவும், இசை இன்பம் செறிந்த பகதி நெறியாகவும் விளங்கு கின்றன. சின்ன திருமலை ஐயங்கார் என்பவர்,பெரிய திருமலை ஐயங்காரின் திருமகனுர். இவர் பாடல்களும் மிக உயர்ந்தவை. இம்மூவர் பாடல் களும் 15-ஆயிரத்துக்கு மேற் பட்டவை.

இவர்களுள் அன்னமையங்கார் முதலில் ஸ்மார்த்தராயிருந்து பின்னர் இராமாநுச சித்தாந்தத்தை மேற் கொண்டார் என்கிருர்கள். இவர் களுக்காகச் சாளுவ நரசிம்ம ராயனும், கிருஷ்ண தேவராயனும் பல ஊர்களை வரியில்லாமல் தானமாக விட்டனர். இவர்கள் அவற்றின் வருவாயைக் கொண்டு திருவேங்கடமுடையானுக் கும் கோவிந்தராசருக்கும், ஆழ்வார் களுக்கும பல கைங்கர்யங்களைச் செய்து திருவேங்கடமுடையானது பெருமையை உலகுக்கு எடுத்துக் காட்டினுர்கள்.

## ஜீயர்கள்

இராமாநுசர் காலத்தில், திருமலை யில் திருநந்தவனத் திருப்பணியை அநந்தாழ்வான் மேற்கொண்டது போலப் பல ஏகாங்கிகளும் மேற் கொண்டிருந்தனர். இராமாநுசர் காலத்திற்குப் பின்னும் பலர் நந்தவன கைங்கர்யங்கள் செய்து வந்தனர். அவர்களுள் முதல்வராகிய முல்லைத் திருவேங்கட ஜீயர் கி. பி. 1387-முதல் 1392-வரையில் அரிசனு லயன் திருநந்தவனக் காப்பாளராய் இருந்தனர் (T.T. 4357) என்பது கல்வெட்டில் காணப்படுகிறது. அவர்க்கு முன்னையோர் பெயர் கல் வெட்டுக்களில் காணப்படவில்லை. திருநந்தவனத்தைப் பாதுகாத்த ஜீயர் அனைவரும் கோயில் கேள்விக்கு உரிய வர் என்று சொல்ல முடியாது. இராமாநுசர் திருவேங்கடச் செல்வத் திற்கும், திருப்பணிகட்கும் குறைவு வராது இருப்பதற்காக, அவற்றை மேற்கொண்டு திருத்தொணடில் ஈடு பட்டிருக்கச் சந்நியாசிகளாகிய ஜீயர் களை ஏற்படுத்தினர். இப்போது திருமலையில் உள்ள பெரிய ஜீயர் மடத் தில் ராமானுசரே கி. பி. 1053-ல் எழுந்தருளியிருந்து, தம் பதவியில் அப்பன் சடகோபராமாநுச ஜீயரை நியமித்தருளினுர். அவருக்குப் பின் பலர் ஜீயராயினர். அவர்கள் வந்த முறையும் பெயர்களும், மடத்துத் தலைவர்களாய் எழுத்தருளியிருந்த காலமும் பிறவும் பெரிய ஜீயர் மடத்தி லுள்ள ஜீயர் பரம்பரைப் பட்டயத் தால் விளங்கும்.

முல்லைத் திருவேங்கட ஜீயருக்குத் திருமலைத் தானத்தார் கி பி. 1390-ல் செய்து கொடுத்த சிலா சாஸனத்தில் (Vol. I No. 187) 'கோயில் கேட்கும் ஜீயர்கள் நிர்வாகம் இரண்டும்' என்று பொதுப் படக் குறிக்கப் பெற்றிருத்த லால், திருவேங்கட ஜீயர் கோயில் கேள்வியுடையராய் இருத்தல் வேண் டும் என்றும், அவருக்கு இளவரசாக மற்றொரு ஜீயர் இருந்திருத்தல் வேண் டும் என்றும் தெரிகின்றன 'கோயில் கேட்கும்' என்னும் பெயர் முதல் முதலாக இக்கல்வெட்டில்தான் காணபபடுகின்றது. பின்னர்க் கி.பி. 1445-ல் கோயில கேள்வி ஜீயராயிருந தவர் எம்பெருமானுர் ஜீயா என்பது T.T. 369-ல் காணப்படுகின்றது. இவர் கி.பி. 1493 வரை ஜீயராகவிருந்தார். இவருக்கு முன்னும், முல்லைத் திருவேங் கட ஜீயருக்குப் பின்னும் எவரும் இருந்ததாகக் கல்வெட்டுச் சான்றுகள் இல்லை. இவ் எம்பெருமானுர் ஜீயர் திருமங்கை யாழ்வார் கோயிலுக்குத் தருமகருத்தர். ஆதலின் இவர் சின்ன ஜீயராதல் வேண்டும். இன்றும் அக் கோயில் தருமகருத்தர் சின்ன ஜீயரே யாவர். இவர் காலத்துப் பெரிய

ஜீயர் திருப்பதி உடையவர் கோயிலுக்குத் தரும கர்த்தரான எதிராஜ ஜீயர்.

திருமலை யொழுகில் காணப்படும் ஜீயர்களின் வரிசை முறை கல்வெட்டுகளில் அமைக்கப்பட்டில்லை. மணவாள மாமுனிகள் காலத்திலிருந்து எழுந்தருளியிருந்த ஜீயர்களின் பெயர்களே ஒழுங்கு முறை தவறாது கல்வெட்டில் காணப்படுகின்றன. மணவாளமாமுனிகள் கி.பி. 1503-லிருந்து மூன்றாண்டுகள் பெரிய ஜீயராய்த் திருமலையில் எழுந்தருளியிருந்து திருவேங்கடமுடையான் செல்வத்திற்கும் திருபணிகளுக்கும் தலைவராய் இருந்தார். வரிசை முறையாக வந்த ஜீயர்கட்கு (பெரிய ஜீயர், சின்ன ஜீயர்) முன் இருந்த அரசர் முதலியோர் மடங்கள் கட்டிவைத்து போற்றி வந்தனர். இவர்கட்கு அக்காலத்தில் கோயில் நிருவாக அதிகாரங்கள் முழுதும் சொந்தமாக இருந்தன. இராமாநுசர் ஏற்படுத்திய கட்டளை அது.

கோயில் நிர்வாகம் இல்லாமல் சில ஜீயர்கள் திருமலையில் நந்தவனத் திருப்பணி செய்து வந்தனர் என்று நாம் கூறினோம், அவர்களுள், ஆதிவண் சடகோப ஜீயர் என்பவர் கி.பி.1506-க்கு முன் திருமலையில் ஒரு மடம் கட்டி வைத்துப் பலருக்குத் தமது சமய உண்மைகளை அறிவித்துச் சிறந்திருந்தார். அவர், நந்தவனத்தை ராயர் குளக் கரையில் அமைத்துத் திருவேங்கடமுடையானுக்குத் திருமாலைத் திருத்தொண்டு நடத்தி வந்தனர். திருவேங்கடவனுக்கும் கோவிந்த ராசனுக்கும் திருபோனகம் அமுது செய்விக்க 260- பணத்தை, கி.பி. 1528-ல் அளித்தனர். இவரது சீடர்களுள் ஒருவன், பெருமாளுக்கு ஏற்படுத்திய நிவேதனத் திருப்போனகத்தில், அவன் பங்கை (விட்டவன் விழுக்காடு) இவர் பெற்றுக்கொள்ளும் உரிமையுடையராய் இருந்தார். இவருக்குப் பின் நாராயண ஜீயர், பராங்குச ஜீயர், ஸ்ரீநிவாச ஜீயர், முதலிய பலர் பேரும் புகழும் பெற்று வைணவ சமயத்தைத் தங்கள் அறிவுரைகளின் ஊற்றத்தால் வளர்த்து வந்தனர்.

கோயில் பிரசாதங்களை விற்றல், பல நூறு ஆண்டுகட்கு முன்னேயே நடந்து வநதது. அந்நடைமுறை புதிதாக ஏற்பட்டதன்று. கி.பி. 1536-ல் ராச்ச ராசாவின் புத்ரர் சாளுவதிம்மரஸயர் என்பார் 1900- பணத்தைத் (தாளில்பாக்கம்) தாளப்பாக்கம் அநந மய்யங்கார் குமாரராகிய திருமலை ஐயங்காரிடமிருந்து பெற்றுக்கொண்டு நாள்வழி ப்ரசாதத்தையும், அதிரசம் பதின்மூன்றையும் விற்று விட்டிருக்கிறார். (Ins. Vol IV No. 93)

திருமலையில் பக்தர்கள் தங்கள் தலையைமொட்டையடித்துக் கொள்ளுகிறார்கள். இதுஎதற்காக ஏற்பட்டது? எப்போது ஏற்பட்ட தென்று சரியாய் தெரியவில்லை. ஆனால், திருவேங்கட உலாவில்,

'................ வந்தவரைத்
தன்னடிமையாக்கித் தலைமயிரைக்
கண்டிப்பான்'' (390)

என்று கூறும் ஒரு தொடர் காணப்படுகின்றது. இது கொண்டு திருவேங்கடவன் தன் இடத்திற்கு வருகின்றவர்களைத் தனக்கு அடிமையாக்கிக் கொண்டு, அதற்கு அடையாளமாக அவர்கள் தலைமயிரை போக்குவிக்கின்றான் என்று அறிகிறோம். முற்காலங்களில் ஒருவனை அடிமையாக்கிக் கொண்டதற்கு அறிகுறியாக அவனுக்கு மொட்டை அடித்தல் வழக்கம்.குற்றவாளிகளாகச் சிறைக்கு வந்தவர்களையும் மொட்டையடித்தல் சில ஆண்டுகளுக்கு முன்வரை வழக்கத்தில் இருந்து அண்மையில் நிறுத்தப்பட்டது.

ஒரு சிலர், பெருமாளுக்குத் தங்கள் தலைமுடியைத் தந்தால், அது தங்கள் தலையையே கொடுத்தது போல் ஆகும் எனறு கருதிச் செய்து கொண்ட பிரார்த்தனையால், தங்கள் உயிர்காப்பிற்காக இதனைச் செய்கின்றனர் என்று சொல்லுகிறார்கள். இவ் உலா கி. பி. 15-ம் நூற்றாண்டில் எழுதப்பட்டது. அதற்கு முன் எப்போது முடிகொடுக்கும் இவ்வழக்கம் ஏற்பட்டதெனபது தெரியவில்லை. எனினும், இவ்வழக்கம், 500 - ஆண்டுகளுக்கு முன்பே நடைமுறையில் இருந்துவந்தது என்பது தெளிவு.

வைணவப் பெருமக்களுள் சிலர் தங்கள் கடமைகளைச் செலுத்துங்கால், திருமலை யடிவாரத்திலேயே அவற்றைச் செய்திருக்கிறார்கள். இதனை,

''—கள் ஸமு...ஸ்ரீவைஷ்ணவரில்
(பெருமக்கள்)
திருமலை இல் திருவடி வாரத்திலே
திருவா—
—கடமை செலுத்துவதாநோம்
(முக்கொ)

என்னும் கல்வெட்டினால் அறிகின்றோம். ( T. T. Ins. Vol. I—165 ) இவ்வாறு அவர்கள் செய்ததற்குக் காரணம் திருமலையைத் தங்கள் காலினால் மிதித்தல் பாவமெனக் கருதியும், இராமாநுசர் முதல்முதல் அடிவாரத்திலேயே தங்கி இராமாயணத்தைப் பாடங்கேட்ட வரலாற்றை யறிந்தும் திருமலை மேல் ஏறுவதற்கு அஞ்சியதே யென்றும், அன்றி, திருமலைமேல் ஏறுவதற்குரிய வசதியில்லாமையே என்றும் இரண்டு வகையாகக் கூறலாம். அவர்கள் கடமை செலுத்தியது பிரார்த்தனைக் காணிக்கையும், திருமுடி களைதலும் என்று கொள்ளலாம்.

திருவேங்கடமுடையானுககுத் தொன்று தொட்டே திருமுன் காணிக்கை செலுத்தும் வழக்கம் இருந்தது. திருவேங்கட உலாவில்,

''மெய்த்தமணி வீழாமல் விந்திகை
விந்திகையாய்
வைத்த கருகூலம் வளராதோ''(114)

என்றும்,

''வெற்றிப் புழுகொழுகும் மேனியான்
காணிக்கை
நிற்றல்பற் றுயம் நிரப்புவோன்.''(40)

என்றும், வருவன வற்ருல் கி.பி.15-ம் நூற்ருண்டிலேயே இக்காணிக்கை மிகுதியாகக் கிடைத்து வந்ததென் பது தெரிகிறது. கல் வெட்டுக்களில இக்காணிக்கை திருமுன காணிக்கை என்று காணப்படுகினறது.

திருமலை ஒழுகிற் கூறப்பட்டுள்ள படியே, திருவேஙகடமுடையான் மடைப் பள்ளிக்கு விறகு (எரி கரும்பு) முறை செம்பவனுக்குச் சிங்க முறை யான் எனபதே பெயராகக் கலவெட்டு களில் (Vol. III—Pages 112 and 137) "தேவையாள், பணி முறை, சிங்கன் முறையான" எனக் காணப்படுகிறது. இப்போதும் திருமடைப் பள்ளியிலுள் ளவா விறகைச் 'சிங்கன் முறை' என்றே கூறுகினறனர்.

தேவையாள் என்பவர் கோயில் மடைப்பள்ளிப் பரிசாரகர் என்று கலவெட்டுககளை மொழி பெயர்த் தவர் குறிப்பிட்டுள்ளார். திருமலை ஒழுகில், தேவியின் ஆட்கள் என்பதே பிழையற்றதென்றும், தேவயாள், தேவையாள்என்பவை தவருன சொற் கள எனறும் கூறபட்டுள்ளன

திருப்பதியில் ஸ்ரீ நிவாசபுரம், நரசிங்கபுரம், அச்சுதராயபுரம், ராமா நுசபுரம், ரகுநாதபுரம் எனப் பல பிரிவுகள அடங்கி இருந்தன. இவற் றுள் இராமாநுசபுரம் கட்டியம் யாதவ ராயனுல் கோவிந்தராசர் கோவிலை அடுத்து அமைக்கப்பட்டது. மற்ற வற்றுள் அச்சுதராயபுரம் என்பது ஆழ்வார் தீர்த்தத்திற்கு அருகில் இருந்து அழிந்துவிட்டது. இரகுநாத புரம் என்பது பெரிய ரகுநாதன் கோவிலைச்சுற்றியுள்ளஇடம்.ஸ்ரீநிவாச புரம் என்பது, அடிப்புளியை யொட் டித தெற்காக அமைந்திருத்தல் வேண்டும். நரசிங்கபுரம்,நரசிம்ம தீர்த் தத்தை ஒட்டியிருத்தல் வேண்டும். தவிர, திருப்பதியில் பெரிய இராச வீதியும் இருந்தது. அஃது இப்பொழு துள்ள (காந்தி ரோடாக) கிழக்கு மேற்குக் கடைத்தெருவாக இருத்தல் கூடும்.

திருமலை ராயன், பெரிய இராசவீதி யிருந்த தன அரண்மனையில், நாள் தோறும் திருவேங்கடமுடையானுக்கு இடையர்கள் நெய் அளந்து கொடுத் ததைத் தானே நேரில் சரிபார்த்து வந் தான் என்பது கி.பி. 1552-ம் ஆண்டில் உண்டான (G. T. 372) கல் வெட்டி ருல் புலனுகின்றது.

திருமலைக் கோயிலில் உள்ள முன் கோபுர வாயிற்படிக்கு அவாவறச் சூழ்ந்தான் திருவாயில் எனவும், துவாரபாலகர் மண்டபத்திற்கு வென்றுமாலையிட்டான் திருமணடபம் எனவும் பெயர்கள் வழங்கிவந்தன. இக்கோயிலின்கண் ஐந்து பேரங்கள் இருக்கின்றன. ஒன்று மூலபேரமாகிய திருவேங்கடமுடையான். இவருக்குப் பெரிய பெருமாள் என்றும் பெயர் உண்டு. இரண்டாவது வேங்கடத் துறைவாராகிய உக்கிர ஸ்ரீநிவாசன் திருவுரு. மூன்ருவது உருவம் மண வாளப் பெருமாளாகிய போக ஸ்ரீநிவாசருடையது. நான்காவது மலை குனிய நின்ருராகிய உத்ஸவமூர்த்தி. ஐந்தாவது மூர்த்தி பலிபேரமாகிய கொலு ஸ்ரீநிவாசன என்பவர். இவ் வைந்து பேரங்களும மிகச் சிறந்த வைகளே.

கல் வெட்டுக்களில் காணப்படும் செய்திகள் அனைத்தையும் பல தலைப் புக்களில் தொகுத்து எழுதினுல் திருமலை திருப்பதிக் கோயில் வரலாறு களும் பிறவும் தெளிவாக விளங்கும்.

*["திருமலை ஒழுகு" என்னும் நூலுக்கு திரு. பாலசுந்தரநாயகர் அவர்கள் எழுதிய முகவுரை இத்துடன் முடிந்தது. மூலநூல் அடுதத இதழிலிருந்து தொடரும்.]*

தொடர் கட்டுரை :

அத்தியாயம்–11

விசுவ ரூப தர்சன யோகம்

பகுதி — 2




# கீதை காட்டும் நல்வழி

"உமது விசுவரூபத்தைக் காண நான் விரும்புகிறேன்'', என்று கூறும் அர்ஜுனன் அதை எப்படித் தெரிவிக்கிருன் என்று பாருங்கள்:

மன்யஸே யதி தத்சக்யம்
மயா த்ரஷ்டுமிதி ப்ரபோ|
யோகேச்வர ததோ மே த்வம்
தர்சயாத்மான மவ்யயம் ||

'இறைவா! அதைப் பார்க்க என்னுல் இயலும் என்று எண்ணுவீராயின், யோகேசுவரரே! உமது அழிவற்ற ரூபத்தை எனக்குக் காட்டியருள்வீராக'.

உண்மையான சிஷ்யன் அல்லது பக்தனின் தன்மை இங்கே சித்தரிக்கப் படுகிறது. நோயாளி ஒருவன் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்றுக் கொண்டிருக்கிருன் என்று வைத்துக் கொள்ளுவோம். அவனது நோய் படிப்படியாகக் குணமடைகிறது. அந்த நிலையில் அவன் ஆஸ்பத்திரியை விட்டு எப்போது வெளியேற வேண்டும் என்பதைத் தீர்மானிக்கவேண்டியது யார்? டாக்டர் அல்லவா! நோயாளி தன்னிச்சையாக மருத்துவமனையிலிருந்து வெளியேற முடியாது. அதுபோல சிஷ்யனது நிலையை நிர்ணயிக்க வல்லவர் குரு ஆவார். இங்கே அர்ஜுனன் சிஷ்யன். பகவான் குரு. எனவே தான் அர்ஜுனன், ''கண்ணு! உமது விசுவரூபத்தைப் பார்க்க என்னுல் இயலும் என்று நீர் கருதுவீராயின் அதாவது அதற்கான தகுதி என்னிடம் உள்ளது என்பதை நீர் அறிவீராயின் அதை எனக்குக் காட்டியருளும்', என்று அவரை வேண்டிக் கொள்கிருன்.

கண்ணனை அர்ஜுனன் இந்த சுலோகத்தில், 'யோகேசுவரன்' என்று அழைக்கிருன். யோகத்தின் தலைவன் அல்லது யோகியரின் தலைவன் என இது பொருள்படும். அணிமா, மகிமா கரிமா, லகிமா போன்ற எட்டு சித்திகள் கை வரப் பெற்றவன் யோகி எனப்படுகிருன். அந்த அஷ்டமா சித்திகளின் தலைவன் இறைவன். ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் இடையே யுள்ள ஒருமைப் பாட்டை நிலை நிறுத்துவது யோகம். அதை அளிக்க வல்லவன் யோகேசுவரனுகிய பகவானே. சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார, திரோதானம் மற்றும் அனுக்ரஹம் ஆகிய பஞ்ச கிருத்தியங்களின் தலைவன் இறைவன் தான். எனவே சிஷ்யனிடம் எவ்வளவு தான் தகுதிகள் இருப்பினும் இறைவனது அருளின்றி, குருவின் கருணை இன்றி ஞானத்தை அவன் அடைய முடியாது என்று அர்ஜுனன் கூறுகிருன்.

''கண்ணு! நீர் யோகேசுவரர். அனைத்தையும் அறிபவர். அனைவரது உள்ளக் கிடக்கையையும் உணர வல்லவர். உமது மகிமையை இதுகாறும் உம்மால் விஸ்தாரமாகக் கூறக்கேட்ட என்னிடம் உமது திவ்விய ரூபத்தையும் நேரில் பார்த்து அனுபவிக்கவேண்டும் என்ற பேரவாவும் கொழுந்து விட்டு எரிகிறது. அதையும் நீர் இப்பொழுது அறிந்து கொண்டிருப்பீர் அல்லவா! எனவே எனது அந்த அவா உண்மையானது என்பதை நீர் உணர்வீராயின் அதை எனக்கு நீர் காட்டியருளுவது உமது கடமையல்லவா!'' என்று அர்ஜுனன் பகவானிடத்து வேண்டுகோள் விடுக்கிருன். இதைக் கேட்டதும் பகவான் மொழிகிருர்:

திரு. டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

பச்ய மே பார்த்த ரூபாணி
சதசோ சத ஸஹஸ்ரச:|
நாநுவிதானி திவ்யானி
நாநுவர்ணு க்ருதீனி ||

'அர்ஜுனு! எனது நூற்றுக் கணக்கான ஆயிரக்கணக்கான வெவ்வேறு விதம், வெவ்வேறு நிறம் மற்றும் வெவ்வேறு தோற்றங்களுடன் கூடிய அதியற்புதமான ரூபத்தைப்பார்'.



# திருமலைத் தெய்வம்

எஸ். கஸ்தூரி ரங்கன் - சிவகங்கை

தெய்வத்தில் உயர் தெய்வம் திருமலையில வாழும் தெய்வம்
மெய் வருத்தம் தீர்க்கும் தெய்வம் மேலாக உள்ள தெய்வம்
காட்சிக் கினிய தெய்வம் கருமை நிறம் கொண்ட தெய்வம்
மாட்சி மிகும் மலையில் நிலையாக உள்ள தெய்வம்

உள்ளத்தின் துயர்தனை உடனே துடைக்கும் தெய்வம்
கள்ளமிலா வாழ்வை கனிவாக அருளும் தெய்வம்
நல்லவர்கள் நாடும் நலமான அனபுத் தெய்வம்
எல்லையிலா உலகம் எங்கும் பரந்த தெய்வம்.

ஸ்ரீ ராமன் வணங்கும் திவ்வியமான பேசும் தெய்வம்
நாலாயிரம் கூறும் அடியார்கள் நாடும் தெய்வம்
மேலோரும் கீழோரும் விரும்பித் துதிபாடும் தெய்வம்
நாலோர் திங்களிலே நமையெல்லாம் ஆளும் தெய்வம்

வேலை சூழ் உலகில் பிறக்கும் வேலை அறுக்கும் தெய்வம்
காலைத் தோன்றி மறையும் கதிரவன் வணங்கும் தெய்வம்
நினைவிற்கும் அபபாற் நெடிதுயர்ந்து நிற்கும் தெய்வம்
கனவிற்கும அப்பாற் காட்சி கொடுக்கும் தெய்வம்

நான் எனும ஆணவத்தை நாசமாக்கும் அருள்தெய்வம்
தான் எனும் அகந்தை தடபடென அழிக்கும தெய்வம்
நன்மை தீமை அறிய நமக்கு வழிகாட்டும் தெய்வம்
உண்மை பொய் அறிய ஒளியினை வழங்கும் தெய்வம்

தெய்வத்தில உயர் தெய்வம் திருமலைத் தெய்வம்
தெய்வத்தின் அருகினில் தெரிசனம் கிடைக்கத்
திருமலைத் தெய்வத்தை தினமும் பணிந்திடத்
திருமலை திருமலை என்றே செப்புவோம் வாரீர்!

சதம் என்றால் நூறு. ஸஹஸ்ரம் என்றால் ஆயிரம். இரண்டையும் ஒன்று சேர்த்தால் நூறாயிரக் கணக்கில் அமைந்த ஒரு எண்ணிக்கை கிடைக்கிறது. உண்மையில் இறைவனது தோற்றங்களை நம்மால் எண்ணிக்கையில் அடக்க முடியாது. அது கற்பனை கடந்தது. வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாதது. முடிவிலாதது, கங்கு கரை காணாத கடலுக்கு நிகர். இன்றைய விஞ்ஞானமும் இந்தக் கருத்தைத்தான் நிரூபிக்கிறது. மிகப் பெரிய சக்தி வாய்ந்த தொலை நோக்கியில் நாம் எத்தனை நட்சத்திரங்களை, கிரகங்களை மற்றும் பிரபஞ்சத்தினுள்ள பொருள்களையெல்லாம்பார்க்க முடியுமோ அத்தனைத்தும் சேர்ந்து, நாம் காண முடியாத அந்தப் பேரண்டத்தின் பிரம்மாண்டமான மொத்தப் பகுதியின் ஒரு மிகச் சிறியதுகளுக்குச் சமானமே என்பது இன்றைய விஞ்ஞானியர் கண்ட முடிவு. அப்படியாயின் இவ்வண்ட பகிரண்டங்களையெல்லாம் படைத்துக் காத்துக் கரக்கும் அப்பரம்பொருளின் சக்தி தான் என்னே! அப்பப்பா! நினைக்கவே முடியவில்லையே!

தனது ரூபம் எத்தகையது என்பதை விளக்கப் பகவான் சில அடைமொழிகளை ஈண்டு சேர்க்கிறார்.'நானாவிதானி,' 'திவ்யானி' 'நானாவர்ணானி' 'நானாக்ருதானி' என்பவையே அவை.

## 'நானாவிதானி'

'பல்வகையான' என்ற சொல்லால் இயற்கையில் பொருள்களுக்கிடையே புறத் தோற்றத்தில் வேற்றுமைகள் இயற்கையாயமைந்தவை என்பது எடுத்துக் காட்டப்படுகிறது. மனிதர், தேவர், அசுரர், பறப்பன, ஊர்வன, செடி, கொடி, விலங்கு...... என்று உயிரினங்கள் பலவகை. அவற்றில் ஒவ்வொரு வகையிலும் எத்தனை எத்தனையோ உட்பிரிவுகள். ஒன்றிலிருந்து மற்றது வேறுபட்டது. ஒன்று போலமைந்த இரண்டு பொருள்களை இயற்கையில் எங்குமே நாம் காண

முடியாது. வேற்றுமை தான் இயற்கையின் மேன்மை. இத்தனை வகைவகையான உயிரினங்களில் மனித இனமும் ஒன்று. அந்த மனிதரில் தான் எத்தனை வேற்றுமைகள்!

பருமனானவர் - ஒல்லியானவர், நெட்டை-குட்டை, சுறுசுறுப்பு-சோம்பேறி, கறுப்பர்-வெளுப்பர், ஏழை-பணக்காரர், அறிவாளி - அறிவிலி, நல்லவர்-தீயவர், அடக்கமானவர்-படபடப்பானவர், அழகுள்ளவர் - அழகற்றவர்... இந்தப் பட்டியல் நீண்டு கொண்டே போகும்.

'இத்தனை வேற்றுமைகளும் வெறும் புற அளவில் உள்ள ஒன்றே தவிர, அடிப்படையில் அனைத்தும் நானே. வேற்றுமையில் ஒற்றுமையைக் காண்பதே மெய் அறிவு', என்று குறிப்பால் ஈண்டு பகவான் அர்ஜுனனுக்கு உணர்த்துகிறார்.

## 'நானா வர்ணா ஆக்ருதீனி ச'

பல வர்ணம், பல தோற்றம். நிறமும் தோற்றமும் மாறுபட்டிருக்காவிடில் நமது வாழ்க்கை சப்பென்று ஆகிவிடும். நமக்கிடையில் தான் எத்தனை வேற்றுமை! நம்மில் சிலர் காக்கையைப் போல அழகிய கறுப்பு நிறம். மற்றும் சிலர் வெளுப்பர். வேறு சிலர் சிவப்பு நிறத்தவர். வெளுப்பன் கறுப்பனை ஏதோ ஒரு வித அருவருப்புணர்ச்சியுடன் பார்க்கிறான். தோலின் நிறத்தை முன்னிட்டு நாம் நமக்கிடையே எத்தனை ஏற்றத் தாழ்வுகளை உண்டாக்கிக் கொள்கிறோம்! ஐயோ! திருமணச் சந்தையில் இந்த நிற வேற்றுமை படுத்தும் பாடு சொல்லி முடியுமா! அது மட்டுமா! தென் ஆப்பிரிக்காவிலும் மற்றும் உலகில் பல பாகங்களிலும், கறுப்பர்-வெளுப்பர் சண்டை இன்னும் தீர்ந்த பாடில்லையே!

சற்று ஆராய்ந்து பார்த்தால் இந்த அனைத்து நிறங்களும் அடிப்படையில் ஒன்றே. அது மட்டுமல்ல, பல்வேறு நிறங்கள் ஒன்றுபடும்போது உண்டாவது நிறமற்ற தன்மை அதாவது வெண்மை. இதை மிக எளிதில் நாம் நிருபித்து விடலாம். ஒரு வட்டவடிவ அட்டையில் பல நிறங்களைப் பல பகுதிகளில் அடுத்தடுத்து சம அளவில் தீட்டி அந்த அட்டையை வேகமாகச் சுழற்றினால், நம் கண்ணுக்குத் தெரிவது எந்த ஒரு குறிப்பிட்ட நிறமும் அல்ல, வெள்ளை நிறம். எனவே எல்லா நிறமும் இறைவனின் நிறமே. இதைப் பாரதியார் நன்கு அனுபவித்திருக்கிறார். 'காக்கையின் கரிய நிறம், தீயின் செந்நிறம், இலையின் பச்சை நிறம்—எல்லாம் நந்தலாலா நீயே' என்கிறார் அவர்.

'ஆகிருதி' என்றால் தோற்றம். இயற்கையில்தான் எத்தனை எத்தனை தோற்றங்கள்! விண்ணை முட்டும் இமயமலை, பரந்து விளங்கும் பாலைவனம், ஆழமான கடல், பொங்கிப் பாயும் நதி, சோவென்று கொட்டும் அருவி...... இன்னும் எத்தனை எத்தனையோ தோற்றங்கள்! இத்தனையும் இறைவனின் தோற்றங்களே!

இவையனைத்தும் அடிப்படையில் எத்தன்மையவை?

## 'திவ்யானி'

அதாவது தெய்வீகம் பொருந்தியவை. இயற்கையில் உள்ளவற்றில் சில பயங்கரமானவை, சில அமைதியானவை, சில அழகானவை, சில குரூரமானவை - ஆனால் எது எப்படித் தோற்றம் தரினும் அதனைத்தும் தெய்வீகம் வாய்ந்தவை என்பதை பகவான் இங்கு சுட்டிக் காட்டுகிறார்.

மேலும் எதையெல்லாம் பார்க்க வேண்டும் என்று பகவான் சொல்கிறார்?

பச்யாதித்யான் வஸூன ருத்ரான்
அஸ்வினௌ மருதஸ்ததா |
பஹூன்யத்ருஷ்ட பூர்வாணி
பச்யாஸ்சர்யாணி பாரத ||

'பரத குலத்துதித்த அர்ஜுனா! அதிதியின் பன்னிரண்டு புதல்வர்களாகிய ஆதித்தியர்கள், எட்டு வசுக்கள், பதினொரு ருத்திரர்கள், இரு அசுவினி குமாரர்கள், 49 மருத்துக்கள் இவர்களைத் தவிர நீ இதற்கு முன்னர் பார்த்திராத பல அற்புதங்களையும் பார்ப்பாயாக.'

இவர்களையெல்லாம் பற்றி ஈண்டு பகவான் சொல்வதன் காரணம் அனைத்துத் தேவர்களும் தன்னில் அடக்கம் என்பதை எடுத்துக் காட்டுவதற்காகவேயாகும். ஆதித்தியர், வசுக்கள் இவர்களைப் பற்றிய விளக்கம் ஏற்கனவே பத்தாவது அத்தியாயத்தில் விரிவாகத் தரப்பட்டிருக்கிறது. இரண்டு அசுவினி குமாரர்கள் தேவ வைத்தியர்களாகக் கருதப்படுகின்றனர். இவர்களைப் பற்றிய பல வகையான விளக்கங்கள் அக்னி புராணம், வாயு புராணம், வால்மீகி ராமாயணம் போன்ற பல இடங்களில் காணக் கிடைக்கின்றன.

## 'அத்ருஷ்ட பூர்வாணி ஆஸ்சர்யாணி பஹூனி'

'இதற்கு முன்னர் பார்த்திராத வியக்கத் தக்க பல அற்புதங்களையும் பார்' என்று பகவான் கூறுவதில் மிகுந்த தத்துவம் உள்ளது. பொருள்களைப் படைக்கும் சக்தி இறைவன் ஒருவனுக்கு மட்டுமே உண்டு என்பதால் புதிது புதிதாக இறைவன் பொருள்களை உண்டாக்க முடியும். புதிதாக ஒன்றைப் பார்க்கையில் நமக்கு ஆச்சரியம் மேலிடுவது இயற்கை தானே? அதுவும் ஒன்றல்ல, பல. இயற்கையை ஆராய்ந்து பார்த்தால் மென்மேலும் புதுப் புதுக்கண்டுபிடிப்புகள் நமக்குப் புலப்படும். அவை ஒவ்வொன்றும் நம்மை பெரும் அதிசயித்திலாழ்த்துகின்றன. இதைத் தான் மணிவாசகர் தமது திருவாசகத்தில் 'முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே, பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே', என்று அழகுற விளக்குகிறார்.

அடுத்த சுலோகத்தில் தமது ரூபத்தை அர்ஜுனன் எப்படிப் பார்க்க வேண்டுமென்று பகவான் மேலும் விளக்குகிறார்.

(தொடரும்)

# முக்கவி கண்ட காப்பியம்

## "சுந்தர காண்டம்"

திரு. டி. ஜி. அனந்த சுப்ரமண்யம்,
(காபேயன்)
திருப்பதி:

வால்மீகி ஸம்ப்ரதாய கருத்துக்களை தன்காவியத்தில் அழகாக புகுத்துவார். அதற்கு ஒரு உதாரணமாக, இந்த இடத்தைக் கூறலாம். ஹனுமான் தூது செல்வதற்குத் தகுந்தவன் என்பதைத் தெரியப்படுத்துகிறார். ருக்மிணீ கல்யாணத்திலும் அந்தணன் தான் தூதாக அனுப்பப்படுகிறான். ஆகையால் ஹனுமான் அந்தணனாக உருமாறி ஸ்ரீ சீதா தேவியினிடம் பேசுகிறார். இதே ஹனுமான் கிஷ்கிந்தாகாண்டத்தில் இராம லஷ்மணர்களை முதலில் சந்திக்கும் போதும் பிரம்மசாரி அந்தணனாகச் சென்றான்.

மரத்தின் கிளையில் மறைந்து கொண்டு ஹனுமான் இராமனின் வரலாற்றைக் கூறத் தொடங்குகிறார். கம்பர், வால்மீகியைப்போல் சொல்லாமல்—ஹனுமான் சீதையைக் கண்டவுடன் நேராகவே ஸ்வய ரூபத்துடன் 'நான் இராமனின் தூதன்' என்று கூறிக்கொண்டு மரத்தினின்று இறங்கினான். என்று கூறுகிறார்.

''கண்டனனனுமனுவ கருத்து மெண்ணினான்
கொண்டனன் றுணக்கமெய் தீண்டக் கூசுவான்.
அண்டர் நாயகனருள் தூதன் யானெனுத்
தொண்டை வாய்மயிலினைத் தொழுது தோன்றினான்''

அத்யாத்ம ராமாயணம், மரத்தில் மறைந்து இருந்த ஹனுமான் ஸீதா பிராட்டியின் செயலைக் கண்டு இராமனின் வரலாற்றைச் சொல்ல ஆரம்பித்தார் என்று கூறுகிறது ஸீதா பிராட்டி இவ்வார்த்தைகளைக் கேட்டு விட்டு சொல்லுகிறாள்:

**येन मे कर्णपीयूषं वचनं समुदीरितम् ।**
**स दृश्यतां महाभागः प्रियवादी ममाग्रतः ॥**

'என் காதுகளுக்கு அம்ருதமயமான இன்பமான வார்த்தைகளைக் கூறிய அன்பன் என் எதிரில் வரக் கேட்டுக் கொள்கிறேன்' என்று. இதைக் கேட்ட ஹனுமான்,

**अवतीर्य शनैः सीतापुरतः समवस्थितः ।**
**कलविङ्कप्रमाणाङ्गो रक्तास्यः पीतवानरः ॥**
**ननाम शनकैः सीतां प्राञ्जलिः पुरतः स्थित.॥**

உடனே கீழே இறங்கி, சிட்டுக்குருவி உருவத்தில் சிவப்பு முகமும் மஞ்சள் வர்ண உடலுடன் எதிரில் கை கூப்பி, ஸீதை பிராட்டியின் முன்னிலையில் நின்றார் என்று கூறுகிறார்.

துளசிதாஸர் கீழ்வருமாறு கூறுகிறார்; சீதாபிராட்டி அசோக மரத்தடியில் துக்கபட்டுக் கொண்டிருக்கும் பொழுது. மேலிருந்து ஹனுமான் மோதிரத்தைப் போட்டார்.

**कपि करि हृदयँ विचार दीन्हि मुद्रिका डारितब ।**
**जनु असोक अंगार दीन्ह हरषि उठिकर कहेउ ॥**

உடனே அம்மோதிரத்தை எடுத்துத் தன் விரலில் போட்டுக் கொண்டு சிந்திக்க ஆரம்பித்தாள். 'இந்த மோதிரம் இங்கே எப்படி வந்தது. இராமனை ஒருவராலும் வெல்ல முடியாதே! ஒரு வேளை மாயையாக இருக்குமோ' என்று.

**चकित चितव मुदरी पहिचानी ।**
**हरष विषाद हृदय अकुलानी**
**जीति को सकै अजय रघुराई ।**
**माया तें असि रचि नहिं जाई ॥**

ஹனுமந் நாடகத்தில் கீழ்வருமாறு கூறப்படுகிறது.

ஹநுமான் கூறுகிறார் ''ஹே, தாயே! இந்த மோதிரத்தைப் பார்த்துப் பயப்படவேண்டாம். இந்த மோதிரம் இராமனுடையதே! ஆனால் இராமனுக்கு இம்மோதிரம் வளையலாக மாறிவிட்டது. அதற்குக் காரணம் தங்களின் பிரிவேயாகும்'' என்று.

**एनां व्याहर मैथिलाधिपसुते नामान्तरेणाधुना**
**रामस्त्वद्विरहेण कंकणपदं हस्ते चिरं दत्तवान् ।**

வால்மீகி கீழ்வருமாறு கூறுகிறார் :

**गृहीत्वा प्रेक्षमाणा सा भर्तुः करविभूषणम् ।**
**भर्तारमिव सम्प्राप्तं जानकी मुदिताभवत् ॥**

சீதாபிராட்டி மோதிரத்தைப் பெற்றுக்கொண்டு இராமனையே அடைந்தது போல் மகிழ்ச்சியுற்றாள் என்று. இந்த இடத்தை ஹனுமன் நாடகம் பின்வருமாறு வர்ணிக்கிறது.

**मुद्रे सन्ति सलक्ष्मणाः कुशलिनः श्रीरामपादाः मुखम् ।**
**सन्ति स्वामिनि मा विधेहि विधुरं चेतो अनया चिन्तया ॥**

இங்கு ஓர் சந்தேகம், இராமன் எல்லாவற்றையும் துறந்து முனிவேஷம் பூண்டு வந்துள்ளான். அத்தகைய இராமனிடம் தங்க மோதிரம் எப்படி இருந்தது என்று. இராமன் மோதிரத்தை விரலில் போட்டுக்கொள்ளவில்லை அதை கையிலேயே வைத்திருந்தான் என்பதை வால்மீகி கிஷ்கிந்தா காண்டத்தில் கூறுகிறார். ஹநுமானிடத்தில் இராமன் மோதிரம் கொடுத்துச் சமாசாரம் சொல்லும் இடத்தில்,

**ददौ तस्य ततः प्रीतः स्वनामांकोपशोभितम्**
**अंगुलीयमभिज्ञानं राजपुत्र्याः परन्तपः ॥**

இராமன் கையில் இருந்ததைத்தான் கொடுத்தான் என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் மோதிரத்தைக் கழற்றிக் கொடுத்தான் என்று சொல்லவில்லை. தன் பெயர் பொறித்த மோதிரத்தைக் கொடுத்தான் என்றுதான் இருக்கிறது.

(தொடரும்)

# ஸ்ரீ உடையவரும் உறங்காவில்லியும்

செநதமிழ் நாடு பணடைப்பெருமை யுடையது. நம் பாரத நாட்டின பண பாட்டை உயரச் செயத உரிமை பெரிதும் இதற்குண்டு என்றுகூறின அது மிகையாகாது. வையகத்தில் வைதிக சமயங்கள் வளர்சசியடை வதறகுக் காரணமாயிருநத மூனறு சமயாச்சாரியர்கள தோனறியதும் இநநாட்டிலதான். அம்மூவருள் பகதி மாாக்கமென்னும் அன்பு நெறியில மக்கட் சமுதாயத்தைச் செலுததி வாழ வைத்த பெருமை ஸ்ரீ இராமா நுஜரைச்சாரும். பன்னிரெணடாம் நூற்ருண்டில் தொணடை நாடு செய்த தவபபயனுய் ஸ்ரீ பெரும்பூதூரில் தோன்றித் தொண்டாகுலம் வாழ வழி வகுத்துத் தந்ததோடு, ஸ்ரீ நாத முனிகளின் உள்ளக்கிடக்கையைக் குறிப்பாலுணர்ந்து 'வேதம தமிழ் செயத வித்தக'னின் விசிஷ்டாத் வைத கொள்கையினை நிறுவி உல கறியச் செய்த மகான் ஸ்ரீ இராமா நுஜர். ஸ்ரீ பாஷ்யத்தை நமக்கு உப கரித்த உபய வேதாந்தியாம் அப் பெருமகனுரை 'ஸ்ரீஉடையவரெ'ன்று வைஷ்ணவ உலகம் போற்றி மகிழும். 'எம்பெருமானுா' என்றும் ஏத்திப் புகழப்படும் இபபெருந்தகை தமிழ கததில் நெடுநாடகள் வாழ்ந்து, நாடெங்கும் போந்து ஆணட வனுக்குத் தொணடு செய்வதில் இனம், குலம், மொழி என்னும் வேற்றுமைகளைப் பாராடடாத அடி யாா குழாத்தை வளாத்தார். பாக வத அபசாரத்தைப் பெருங்குற்ற மாகக் கருதும் ஸ்ரீ வைஷ்ணவம், 'ஜன்ம நிரூபணத்தை'—பாகவத குலத்தின் ஜாதி உயாவு, தாழ்வு களைக கருதுதல் முதன்மையான அபசாரம்' என்று கூறும. இத்தகைய உயரிய கொள்கையை ஸ்ரீ வைஷ்ண வர்கள் உணர்ந்து, உய்யும் பொருட்டு இராமாநுஜர் உறங்காவில்லி என் னும் வேடுவனை 'உறங்காவிலலி தாச' ஞக்கி ஆட்கொண்ட ஒருணமை வர லாற்றினை ஈணடுக் காணபோம்.

அகளஙகன் என்பான் ஸ்ரீ இராமா நுஜர் காலத்தில் உறையூரைத் தலை நகராகக கொணட சோழ நாட்டின ஒரு பகுதியை யாணடு வந்த குறுநில மன்னன. அவனை அகளங்க சோழ னென்று கூறுவா. அவனது மெயக் காப்பாளர்களில் முதன்மையானவன் 'உறங்கா விலலி' எனனும் மல்லன். அவன் வேடா குலத்தைச் சேர்ந தவன். இராபபகலாகக் கண்ணுறங் காது இராமபிரானைக் காத்த இளைய பெருமாளைப் போல் இவனும் அகளங் கனைப் பாதுகாத்து வந்த காரணத் தால இவன் உறங்காவில்லி என்ற ழைக்கபபட்டான் போலும். சிலம் பம், மற்போர் முதலிய பயிற்சிகளில் நிகரற்றவனுய் விளங்கிய இவனை 'மல்லாக்கரசு' என்று கூறுவதுணடு. இவனுடைய இல்லக்கிழத்தித் திரு மகளை யொத்தத் திருவினள். 'அழ கனைத்தும் திரணடு, ஒரு பெணணுருக் கொணடதோ' என்று புகழத்தக்க பேரழகி. அவளை வேடர்கள், 'பொன் மகள்—பொன்னுச்சி' யென்று பெய ரிட்டழைத்தனர். உறங்காவில்லி அவளது பேரழகில் ஈடுபட்டுக் காத லென்னும கனவுலகில தன்னை மறந்து வாழநது வந்தான். அவன் கடமை யுணர்சசி உடையவனுயினும் அரசன் பணியில்லாதபோது தன் காதலியைப் பிரியாது காலங்கழித்து வந்தான். 'போர்க்களத்தில் பகைவரும் அஞ்சத் தக்க பேராண்மை ஒரு பெண்மையின் முனனர் தோறறது' என ஓரொப் பற்ற வீரன் வாயிலாக வள்ளுவப் பெருநதகை,

''ஒண்ணுதறகோஒ உடைநததே ஞாடபினுள்
நண்ணுநம உட்குமெனபீடு''

எனக் கூறியிருப்பது இவண நோக்கத் தக்கது.

திருவரங்கத்தில் வசந்தப் பெரு விழா நடை பெறுங்காலம். பொன் ஞைசிககு அவ்விழாவினைக் கண்டு களிக்க வேணடுமென்ற பேரவா. அவள் தன் உள்ளக்கிடக்கையை வில்லியிடம கூற அவன் அதற் கொருப்பட்டு அவளை அழைததுக கொணடு திருவரங்கம் சேர்நதான். விலலிக்கோ விழாவைப் பறறிய கவலையில்லை பொனனுச்சியின் அழகைக் கணணுரக் கண்டு களிப் பதும், அவளுடன் உலலாசமாகத திரிந்து அவளழகில் தன்னை இழந்து, மகிழ்ந்திருப்பதும் அவனுக்கு வசந்த விழாவாகத தோன்றியது. கொளுத் தும கோடை வெயில். அரங்க நகர்த்திருவீதி ஆதவனின் வெப்பத் தால் அனலைப் பொழியா நின்றது. அவவெயிலில் பூங்கொடி போல் துவணடு, வாடி நின்ற பொன்னுச்சி யின பாதங்கள் வெப்பத்தால் சிவந் தன என்று உறங்காவில்லி, அகளங் கனுல் தனக்களிக்கப்பட்ட பொற் பட்டாடையை அவளுக்கு நடை பாவாடையாக விரித்து, விரித்து அதன்மேல அவளை மெதுவாக நடத்திக் கொணடு, ஒரு குடையை அவள் தலைககுமேல் தூக்கிப்பிடித்துக் கொண்டு சென்ருன். அவன் செயலைக் கணட பலரும அவனை இழித்துக்கூறி எள்ளி நகையாடினர். இவ்வாறு இவர்களிருவரும ஸ்ரீ இராமாநுஜர் திருமடத்தைக கடந்து செல்லுங்கால் அங்கிருநத அடியார்கள் அவன் பொல்லாத மல்லன என அவனை வெளிப்படையாக இகழ்ந்து பேச அஞ்சித்தம்முள் முணு முணுத்து நின்றனர். அது சமயம் இராமாநு ஜரும், சீடர்களும் காவிரியில் நீராடித் திரும்பிக் கொண்டிருந் தனர். உடன் வந்த அடியார்கள் இக்காட்சியைக் கணடதும், அவருக்குக் காட்டி நகையாடினா.

இராமாநுஜர் உடன்வந்த ஒரு பாகவதரை விளித்து, அவ்விருவரை

**வித்துவான் க. ஆ. மார்க்கபந்து,**
**காஞ்சிபுரம்-1.**

யும் தம்மிடம அழைத்து வருமாறு பணித்தார். அவர்கள் வில்லியை யும், பொன்னுச்சியையும் அவர்பால் அழைத்துச் செல்ல அவர் 'மக்காள்! நீவிர் யாவிர், எவ்வூரினர்?' என்று கேட்டார். வில்லி உடையவர் திரு மேனியையும், கருணை பொழியும் கண்களையும் கண்டு, சற்று ஒதுங்கி நின்று 'சுவாமி அடியேன் ஒரு மல்லன். அகளங்கச் சோழனிடம் மெய்க்காப்பாளனுகப் பணிபுரிபவன். இவள் என் மனைவி. திருவரங்கப் பெருமானின் திருவிழாக் கோலம் கணடு களிக்க இங்கு வந்துள்ளோம்' என்றான். இராமாநுஜர் மல்லனை நோக்கி, 'நீர் இப்படிப் பலரும் அறிய மனைவிக்குப் பணிவிடை புரிந்து வருகிறீரே. பிறர் உம்மை இகழ்ந்துரைப்பர் என்பதைச்சிறிதும் எண்ணிப் பார்க்க வில்லையோ?' என் றார். மல்லன் தன் மனைவியைச் சுட்டிக் காட்டிச், 'சுவாமி இவளைப் போன்ற அழகிய பெண் எங்கள் வேடர் குலத்திலேயன்றிவேறெங்கும் கணடதில்லை. இவளது பேரழகில் என்னையிழந்து, இவள் வருநதா வண்ணம், இறைவன் எனக்குத் தந்த இவ் வெழிலோவியத்தைப் போற்றி வருகிறேன்' என்றான. உடனிருந்த பாகவதோத்தமர்கள பலரும வாய் விட்டுச் சிரித்தனா.

இராமாநுஜர் தம சீடர்களை நோக்கி 'இது காதலின் சக்தி, எவ் வளவு பலசாலியையும் இவ்வாறு டையச் செய்யும் வன்மை இதற் குண்டு. காதலால் தன்னை மறந்து செய்யும் எச்செயலும் ஏளனத்துக் குரியதென்றுஎண்ணிவிட வேணடாம. இக்காதல் இறைவன்மீது செலுத்தப் பட்டால் பக்திக் காதலாக மாறி விடும். பராங்குச நாயகி, பரமன் பால் கொண்ட காதலை நீவிர் அறி யீர் போலும்?' என்று அமைதியாக அவர்களுக்கறிவுறுத்தினர். அவர் தனக்குப் பரிந்து பேசுவதாகப் புரிந்து கொண்ட வில்லி, மீண்டும 'சுவாமி இவள் அழகை எப்படிப் போறறும விருப்பேன; இவள் கண்ணழகுக்கு மேலான அழகு வேறுணடோ?' என் றான். இராமாநுஜர் அவ்வேடுவனை நோக்கி 'அப்பா, இதற்கும் மேலான வேறோர் அழகுண்டு' என்று உறுதி யான குரலில் கூற அவன் திகைத்து நின்றான். எம்பெருமானர் அவனைத் தம் திருமடத்திற்கு வருமாறு கூறித் திருக்கூட்டத்துடன் சென்று விட் டார். உறங்காவில்லி தன் மனை யாளுடன் வசந்தப் பெருவிழாவைக் கண்டு களித்தானாயினும், உடையவர் கூறிய 'வேறோர் அழகுண்டு' என்னுஞ் சொல் அவன் உள் மனத்தைவிட்டு நீங்காது உறுத்திக் கொண்டிருந்தது. ''அப்படியும் ஓரழகு உண்டோ?'' என்றெண்ணியவனாய் வில்லி பொன் னுச்சியைத் தன் சுற்றத்தார் வீட்டில் தங்க வைத்துத் தான் தனியனாய் இராமநுஜமடத்தை அடைந்தான்.

தம்மை நாடிவநத வில்லியைக் கண்ட இராமாநுஜர் பெருவியப் புடன் அவனை வரவேற்க. அவன் அவரது திருவடிகளில் அடியற்ற மரம்போல் விழுந்து வணங்கி நின் றான். உடையவா அவனை அழைத்துக் கொணடு வசந்த விழாக் கொணடருள எழுந்தருளியிருந்த திருவரங்கச் செல்வனைச் சுட்டிக்காட்டி ''நம் அரங்கத்தணணலைப் பாரும்! அழகிய மணவாளரைப் பாரும்! இவரைக கணணழகர், வாயழகர், மேனியழகர் எனறெல்லாம் ஸ்ரீ ஆணடாள் முதல் ஆழ்வார்கள் பலரும் பாடிப் பரவிய உண்மையை அறியீர் போலும்; இவரது கமலச் செங்கணணுக்கு ஒப் பானதோர் அழகு விண்ணிலுமில்லை, மணணிலுமில்லை.'' என்று உறங்கா வில்லியின் இதயததைத் தொட்டுப் பேசுவது போல் ஒரு நீண்ட சொற் பொழிவு செயது விட்டாா. விலலி ஒருகணம திகைத்து நின்று அரங்கனை உற்று நோககி, 'ஆஹா! என்ன அழகு; இதுவன்றோ உணமையழகு?, என்று கூறித் தன்னை மறந்தான். மேலும் அவர் அவனுக்குத் தெரிந்த பாஷையில் ஆழ்வார்கள், அரங் கணணல் பால் கண்டுகளித்த அழகு தத்துவத்தை உணர்த்திவிட்டார். வில்லி அரங்கத்தம்மானை, வைத்த கண் வாங்காமல் அடிமுதல் முடிவரை உற்று நோக்கி, அவரழகில் ஈடுபட்டுக் கண்களில் நீர்வாரத் தன்னை மறந்து இராமாநுஜரின் திருவடிகளில் வீழ்ந்து, 'பெருமானே! அடியேன் உமதடிமை, என்னையாட் கொள்ள வேண்டும்' என விண்ணப்பம் செய்து கொணடான். உடனிருந்த அடியார் கள் வியப்புக் கடலில் மூழ்கினர்.

அன்று விடை பெற்றுச் சென்ற வில்லி மறுநாள் தன் மனையாள் பொன்னுச்சியுடன் திருமடத்தைய டைந்து. இராமாநுஜரை வணங்கிப் ''பெருமானே! இனி அழகு குறித்தும், காதல் குறித்தும் அடியேன் அறிய வேண்டுவன தேவரீர் சந்நிதியில் தான்,வேறெங்குமில்லை. என்னையாட் கொள்ளவேண்டும்'' எனறான். ஸ்ரீ இராமாநுஜர் அவ்வாறே அவர்களை யாட்கொண்டு, அவர்களுக்குப் பஞ்ச சமஸ்காரங்களும் செய்து வில்லிக் குப் 'பிள்ளை உறங்கா வில்லிதாசர்' என்றும், பொன்னுசசிக்கு ஹேமாம பாள் என்றும் தாஸ்யத் திரு நாமங் கள் சூட்டிமகிழ்ந்தார். பின்னா உறங்காவில்லிதாசர் அகளங்க மன்ன னிடம் வேலைபார்த்து வந்த தம் மரு மக்களான வண்ட வில்லி, சண்டவில்லி என்னுமிருவரையும் உடையவர் பால கூட்டிச சென்று பஞ்ச சமஸ்காரங் கள செய்வித்து வண்டவில்லிதாசா சணடவில்லி தாசர் என்னும் பெயா களைச் சூட்டி அவர்களையும் ஸ்ரீவைஷ் ணவராக்கி வாழ வைத்தார். இச செய்திகளைக் கேள்வியுற்ற அகளங்கச் சோழனும் அண்ணல் ஸ்ரீ இராமா நுஜர்பால் வந்து வணங்கித் தன்னை யும் ஏற்றருளுமாறு வேண்ட, சுவாமி கள் அவனையும் தம் சீடர்களில் ஒரு வனுக்கி ''அகளங்க நாட்டாழ்வான்'' என்னும் திருநாமத்தை நல்கி வாழ வைத்தார்.

வாழ்க ஸ்ரீவைஷ்ணவம்!
வளர்க அனபு நெறி! 

தொடர் கட்டுரை :

# சிறையிருந்த செல்வி



பகுதி — 6

## கற்பின் செல்வி

ஒரு கற்புமகள் தன் பிறந்த வீட்டின் பெருமையை விடப் புகுந்த வீட்டின் பெருமையையே பெரிதாக எண்ணுவாள். தன்னைப் பற்றிப் பிறரிடம் அறிமுகம் செய்து கொள்ள நேரிடும் போதும் முதலில் தன் புகுந்த வீட்டினரின் பெருமையை எடுத்துக் கூறி 'அத்தகைய குடியில் பிறந்தவனின் மனைவி நான்' என்று கூறுவதிலேயே பெருமை அடைவாள். அதனுல் தன் பிறந்த வீட்டின் பெருமையைச் சிறிதும் எடுத்துக் கூற மாட்டாள் என்பதில்லை. தன் பிறந்த வீட்டின் பெருமையைக் கூறினுலும், புகுந்த வீட்டின் பெருமைக்கே முதலிடம் தருவாள்.

சிந்தை கவர் சிலப்பதிகாரத்திலும் இதைப் போன்ற தன்மையைக் காணலாம். 'கள்வன்' என்று தன் கணவனைக்கொன்ற பாண்டியன் முன் தலைவிரி கோலமாக, உடலெங்கும் புழுதி படரக் கொற்றவையைப் போல் வந்து நிற்கிறுள் கண்ணகி அவளைக் கண்ட பாண்டியன்,

'நீர்வார் கண்ணை எம்முன வந்தோய்
யாரையோ நீமடக் கொடியோய்''

(சிலமபு வழக்குரைக் காதை-47-48) என்று வினவுகிறுன் அதைக் கேட்ட கண்ணகி தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளும்போது கூறும் வார்த்தைகள் கவனிக்கத் தக்கவை.

---

திரு. என். கிருபானந்தன்,
M.A., BSc, Jr. Dip-in-Ling,
திருப்பதி.

---

'' தேரா மன்ன! செப்புவது உடையேன்
எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்பப்
புளளுறு புன்கண் தீர்த்தோன்; அன்றியும்
வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சு சுடத் தான்தன்
அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்
பெரும்பெயர்ப் புகார்என் பதியே அவ்வூர்
ஏகாச் சிறப்பின் இசைவிளங்கு பெருங்குடி
மாசாத்து வாணிகன் மகனை ஆகி
வாழ்தல் வேண்டி ஊழ்வினை துரப்பச்
சூழ்கழல் மன்ன! நின்னகர்ப் புகுந்து ஈங்
கென்காற் சிலம்புபகர்தல் வேண்டி நின்பாற்
கொலைக்களப் பட்ட கோவலன்மனைவி,
கண்ணகி என்பது என்பெயரே...''

(சிலம்பு வழக்குரைகாதை, 49-62) என்று பதில் கூறுகிறுள் கண்ணகி. காவியம் முழுவதிலும் கண்ணகி பேசும் வார்த்தைகள் மிகச் சில. சுருங்கப் பேசி விளங்கவைக்கும் ஆற்றல் படைத்த கற்புக் கரசியான கணணகியா இவ்வளவு பேசுகிறுள்?

அவள் நிலை எப்படிப்பட்டது? முதலில் சிபி, மனு முதலான சோழர்களின் நீதி வழி தவறாத குணத்தை எடுத்துக் கூறி, அத்தகைய சிறப்பு வாய்ந்த சோழர்களின் தலைநகரமாகத் திகழும் புகார் நகரமே தன் ஊர் என்று பெருமையுடன் கூறும் கண்ணகி, அடுத்து, 'அந்நகரில் பழியற்ற, சிறப்புடன் புகழுடன் விளங்கும் பெருங்குடி வாணிகனான மாசாத்துவான் என்பவனுடைய மகனாகப் பிறந்து, ஊழ்வினை காரணமாக, இங்குவந்து என் காற்சிலம்பை விற்க முயன்ற போது உன்னால் கொலையுண்ட கோவலனின் மனைவி நான்' என்று கண்ணகி கூறுகிறாள். ஆக, எத்துணைத் துன்பச் சூழலில் இருந்தாலும் தன் புகுந்த குடியின் பெருமையை எடுத்துக் கூற மறந்தாள் இல்லை கண்ணகி.

இதைப் போலவே கற்புச் செல்வி சீதையும் செயல்படும் கட்டம் கம்ப ராமாயணத்தில் காணலாம். வஞ்ச மகளின் துர்போதனையைக் கேட்டு மனம்தடுமாறியஇராவணன் மாரீசன் மூலம் இராம இலக்குவன் இருவரையும் சீதையை விட்டு அகலுமாறு செய்கிறான். பின்பு ஒரு முதிய முனிவராக வடிவம் தாங்கி, இயற்கையெல்லாம் துன்பமுற்று வாடுமாறு, சீதையிருந்த இடத்திற்கு வருகிறான். துறவி வடிவந் தாங்கி வந்த கெடுமதியானை உண்மையான முனிவரென நம்பிய சீதை அவனை உள்ளழைத்துச் சென்று, ஆசனம் அளித்து உபசரிக்கிறாள். இங்ஙனம் மாசற்ற மனத்தினளாகத் தன்முன் நின்ற சீதையைப் பார்த்து இராவணன் யார் நீ? இப் பர்ண சாலைக்கு உரியவர் யார்? என்று கேட்கிறான். அதற்கு விடை கூறும் முகமாகச் சீதை,

**'' தயரதன் றொல்குலத் தனயன நமபியோ**
**டுயர்குலத் தன்னைசொ லுச்சி யேந்தினான்**
**அயாவில னிவ்வழி யுறையு மன்னவன்**
**பெயரினைத் தெரிகுதிர் பெருமை யிரென்றாள் ''**

*(கம்ப. ஆரணியகாண்டம்: சடாயு உயிர்நீத்த படலம். 843)*

அதாவது ''பழமையான இட்சுவாகு குலத்துப் பிறந்த தசரத சக்ரவர்த்தியின் குமாரர் தனதம்பியுடன், உயர்ந்த குலத்துப் பிறந்த தாயின் கட்டளையாகிய சொல்லைத் தன் தலைமேல் தாங்கினவராய் வருத்தமின்றி இவ்விடம் வந்து வசிக்கின்றார். அவரது பெயரை நீவிர் அறிந்திருப்பீர்'' என்று அவள் கூறும் பதிலில் தன் புகுந்த வீட்டின் பெருமையை எவ்வளவு நுண்ணிதாகப் பழி வராத வாறு கூறுகிறாள். ஆக இங்கும் நாம் புகுந்த வீட்டின் பெருமையைக் காக்க விரும்பும் கற்புக்கரசியாகவே சிறையிருந்த செல்வியைச் காண்கிறோம்.

தன் கணவன் பெயரை வெளியே பிறரிடம் சொல்லுவது, அவ்வளவு ஏன் கணவனையே பெயரிட்டு அழைப்பது இந்தக் காலத்துச் சில பெண்களுக்கு வேண்டுமானால் நாகரீகமான செயலாகத் தோன்றலாம். ஆனால் உண்மையான கற்புமகள் தன் கணவன் பெயரை வாய்விட்டுச் சொல்லத் தயங்குவாள். அவனது பெயரைப் பிறருக்கு உணர்த்த வேண்டி வரும் போதும் வேறு சில அடையாளங்கள் மூலமும், குறிப்புகளின் மூலமும் உணர்த்துவாள். இந்தத் தன்மையையும் நாம் சீதையிடம் காணலாம். மேற்கண்ட பாடலிலும், சீதை இராமனது பெயரை வெளிப்படையாகக் கூறவில்லை. குறிப்பாக, அவனது குடும்பத்தினைப் பற்றிக் கூறுவதன் மூலம் இராமனது பெயரை இராவணனுக்கு உணர்த்த முயலுகிறாள் சீதை அவ்வாறே அடுத்த பதிலிலும், தன்னைப் பற்றிக் கூறும் போதும், ''காகுத்தன் மனைவியான'' என்று கூறுகிறாள் மறுவில் கற்பினாள். காகுத்தன் என்பது இராமனைக் குறிக்கும் ஓர் அடையாளப் பெயர். அதாவது காகுத்தன் வமிசத்தைச் சேர்ந்த இராமனைக் குடும்பப் பெயரால் லேயே குறிப்பிடுவதும் உண்டு. இங்கும் கணவன் பெயரை வாய் விட்டுக் கூறத் தயங்கும் கற்புமகளாகவே சீதையைப் படைக்கிறான் கம்பன்.

இங்கு நமக்கு ஓர் ஐயம் தோன்றியே தீர வேண்டும். கணவன் பெயரை வாய்விட்டு வெளிப்படையாகக் கூறுவது கற்புடைய மகள் செயலன்று என்றால் சிலப்பதிகாரத்தில் கண்ணகி, பாண்டியன் முன் 'கோவலன் மனைவி' என்று கூறுகிறாளே! அப்படியென்றால் கண்ணகி கற்புடை மகளில்லையா? இங்கு நாம் ஒன்றை நன்கு சிந்திக்க வேண்டும். கண்ணகி நிற்கும்இடமோஅவளுக்குப் புதியதோர் இடம். மனமோ துன்பத்தால் துடித்துஅழுகிறது. அத்தகைய சூழ்நிலையில் கண்ணகி கோவலன் பெயரைச் சொல்லியே தீரவேண்டியுள்ளது. ஏன் குறிப்பால் உணர்த்தி இருக்கலாமே? என்றால் காலத்தை நீட்டிக்காமல் உடனடியாக நீதியைக் கேட்க வேண்டும் துடிப்பும், அவன் சாதாரண குடிமகன் இல்லை, உயர்ந்த குடியில் பிறந்த கோவலன் என்னும் பெயரினன் என்பதை அரசனுக்கு உணர்த்த வேண்டும் என்ற எண்ணமும் காரணமாகக் கூறலாம். ஆக இந்தச் சூழ்நிலை போன்ற தவிர்க்க முடியாத சூழ்நிலையில் கணவன் பெயரைக் கூறுவதில் தவறில்லை எனலாம். இதனால் நாம் கண்ணகியின் கற்பிற் பெருமைக்கு எந்தவித மாசும் ஏற்படவில்லை.

ஆக நாம் இதுவரை சிறையிருந்த செல்வியான சீதை ஒரு கற்புச் செல்வி என்பதைச் சுருக்கமாக ஆராய்ந்தோம் இனிச் சீதை ஓர் ''அறிவுச் செல்வி'' என்பதை இனி வரும் பக்கங்களில் ஆராய்வோம்.

**(தொடரும்)**

# செய்திச் சுருக்கம்

## திருமலையில் புதிய விருந்தினர் விடுதி

11-8-79 அன்று, திருமலையில் தி.தி. தேவஸ்தானத்தாரால ரூ.8,50,000/- செலவில கட்டப்பட்ட ஸ்ரீ பத்மாவதி வி.ஐ.பி.விருந்தினா விடுதி கட்டிடத்தினை ஆந்திரமாநில அறநிலையஅமைச்சர் திரு. பி. வி. சௌதரி அவர்கள் திறந்து வைத்தார். தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவா திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத், தி.தி. தேவஸ்தான மேலாண்மைக் குழுத தலைவர் டாக்டர். என். ரமேஸன, மற்றும் பல முக்கிய தி. தி தேவஸதான உயர் அலுவலர்கள் இத்திறப்பு விழாவில பங்கேற்றனர். அனறே, திருமலையில் ரூ. 2,50,000 செலவில் கட்டப்பட்ட 'ஹில் வ்யூ' விருந்தினா விடுதி கட்டிடத்தையும அமைச்சரவர்கள் திறநது வைத்தார்.

## ஏழை இல்லம்

22-7-79 அன்று திருபபதியிலுள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா ஏழை இலலத்தில் (தொழு நோயாளர் மறுவாழ்வுநிலையம), அவஇல்லததில் குடியிருப்போர்கள் செயத கைவினைப் பொருட்கள் அவாகளுககே வழங்கும் வகையில் சமபநதப்பட்ட விழா ஒன்று நடைபெற்றது. விவசாயம், கூடை, நாறகாலி நரம்பு பிணனுதல், காலணி, தச்சு, கைததறி ஆகிய கைத்தொழில்களை மேற்கொண்டு, அதனுற்றுன அவஇல்லததில குடியிருப்போர் செய்த சுமார் ரூ. 20,000 மதிப்புள்ள கைவினைப் பொருட்களில் சிலவற்றை அவர்களுககே, இவ்விழாவின் போது தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு.பி.வி.ஆா.கே. பிரஸாத் அவர்கள் வழங்கினுர். அவர் தம் உரையில், தெரிந்தோ தெரியாமலோ இச்சமுதாயத்தால் புறக்கணிக்கப்படடு இத்தொழுநோய இல்லத்தில சேர்க்கபபட்டுள்ள நம் சகோதரர்களுக்கு இவ்வுலகில வாழுதற்கு ஊக்கமும், நம்பிக்கையும் ஊடடும் வகையில் தி. தி. தேவஸ்தானம அவர்களுக்கு தன்னுலியன்ற மறுவாழ்வுக்குரிய உதவிகளை செய்து வருகின்றது எனறு குறிப்பிட்டாா. மேலும்தொடர்நது பேசுகையில் இவ் கைவினைப் பொருட்களை வெளியில் விற்கப்படுவதால்வரும்தொகைஅவர்கள் பெயரில முதல் செய்யப்பட்டு அத்தொகை, இலலத்தை விட்டு அகலும அவர்களுககு வழஙகப்படும் அல்லது அவருககுப்பின் இல்லத்தில் சேர்ககப்படுபவர்க்கு வழங்கப்படும்



ஹில வ்யூ கெஸ்ட் ஹவுஸ்-யை, ஆந்திர மாநில, அறநிலைய அமைச்சர் திரு. பி. வி சௌத்ரி அவாகள் திறந்து வைத்தார்.



ஹில் வ்யூ கெஸ்ட் ஹவுஸ்-யை, ஆந்திர மாநில, அறநிலைய அமைச்சர் திரு. பி. வி. சௌத்ரி அவர்கள் திறந்து வைத்தார்.

என்று குறிப்பிட்டு, தொழுநோயா ளர்களின் நோயைத் தீர்க்கும் வகையில் தி.தி தேவஸ்தானம பல நவீன மருத்துவ வசதிகள் மேற்கொள்ள இருக்கிறது என்றும கூறினர். பின்னர் அவ்இல்லத்திற்கு தி. தி. தேவஸ்தானததாரால வழங்கப் பட்டததொலைக் காட்சிசாதனத்தினை இயககிவைத்தார். அதறகு முன்னர் தி.தி. தேவஸதான உயா மருத்துவ அலுவலர் டாக்டர். தனலட்சுமி அவாகள் ஆண்டறிக்கையினை வாசித்தார். விழா இறுதியில், டாக்டர். பாஸ்கரராவ அவர்கள் நன்றி நவின்ருர்.

## நியமனம்

ஆந்திரமாநில அறநிலையத்துறை உதவி ஆணையர் திரு. ஜி.கே. நாயுடு அவாகள திருமலை திருபபதி தேவஸ்தானததின உதவி செயலாட்சித் தலைவராக (Serivices) 21-7-79 முதல் பதவி ஏற்ருர்.

★

## சந்தாதாரர்களுக்கு...

31-10-79-ம் தேதியுடன் சநதாக காலம் முடிவடையும் சநதாதாரர்களின எணகள கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள் உடைய சநதாதாரர்கள் தங்கள் சந்தா எணகளைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேணடிய தொகையைச்- செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும். T

148, 164, 167, 170, 181, 186, 194, 199, 200,
203, 262, 273, 282, 285, 286, 302, 336, 356,
395, 445, 488, 490, 491, 492, 493, 494, 496,
497, 498, 500, 501, 506, 507, 508, 512, 514,
515, 516, 518, 520, 522, 523, 524, 525, 528,
1157, 1163, 1164, 1165, 1173, 1233, 1285

(24-ம பக்கத் தொடர்சசி)

அடுத்த நாளான ஏழாவது நாள் அன்று, சூரிய சந்திர மணடலங்களில் இறைவன் தங்கியிருபபதாகக் கூறப் படுவதால், அதன் அடையாளமாக அன்று காலையிலும் இரவிலும் முறையே சூரிய, சந்திரப்பிரபைகளில அவா திருவீதி வலம் வருவாா. ஒளி களுக்கெல்லாம் ஒளியாக விளங்கும் அவவிறைவனின் சுடரொளியினின்று தான் சூரியனும் சந்திரனும ஒளிப் பெற்று தங்களகடமையைசசெய்கின் றனா என்பதைக் கூறுகின்றனசூரியப் பிரபை,சந்திரப்பிரபை வாகனஙகள். திருமலையிலுள்ள சூரியப்பிரபை வாகனம தென்னிநதியாவிலேயே மிகப் பெரியது என்று கூறப்படுகிறது. ஒளிர்விடும வஜ்ர கவசத்துடன், தலையில பெரிய விலையுயர்ந்த கல் பதித்த கொணடை அணிந்த இறைவனின் திருவுருவம் காணபோா மனதை வெகுவாகக கவரும்.

எட்டாம் நாளன்று இறைவன தன் தேவியாருடன் குறிப்பிடட நன் முகூர்த்ததில வேதங்கள் முழஙக, மங்கள வாத்தியம் ஒலிக்க நன்கு தூய்மையாக்கப்பட்டக் கோயிலைச் சுற்றிய அகன்ற மாடவீதிகளில தேரானது பக்தாகளால இழுக்கப் பட்டு, குறித்த நேரத்தில தேடியைச சேரும. அனறு மாலை வரை இறைவன் தேரில் வீற்றிருந்து பகதர்களுக் குக் காட்சி வழங்குவாா. ஜாதிமத பேதமினறி, எல்லோரும ஒா குலம் என்னும் ஒருமைப் பாட்டுணர்வினை மககள உணாநது செயற்பட வேணடும் என்பதைததான் தேரில இறைவன் பவனி வரும் காட்சி கூறுகிறது. அன்று இரவு இறைவன குதிரை என்ற ஹஸவ வாகனத்தில எழுந தருளுவார்.

ஒன்பதாவது நாள் அவபருத உற் சவம (தீாத்த வாரி) நடைபெறும. இதுதான் கடைசி நிகழச்சி. உபய நாசசிமாாகளுடன ஊர்வலமாக ஸ்வாமி புஷ்கரணியின்அருகில உள்ள ஆதிவராஹ ஸவாமி ஸனனதியை அன்று மதியம் அடைவார். பிரம் மோற்சவம மிகச சிறப்புடன் நடை பெற்றதைக் குறிபபிடும் வகையில் அன்று இறைவனின் சுதர்ஸனம் குறிபபிட்ட நன்முகூாத்தத்தின போது புஷ்கரணியில் இறக்கப்படும். இதுபோது யாத்திரிகர்களும் புஷ்கரணியில் மூழ்கி எழுநதால் அவர்களுடைய பாவஙகள கரையும என்று நம்பப்படுகிறது. இந்நிகழச்சியை தீாததவாரி திருமஞசனம் எனவும் கூறுவா. இப்பத்து நாள பிரமமோற சவத்தினபோது, இநது தாம பிரதிஷ்டானத்தின் ஆதரவில புராண சங கீர்ததனஙகளும், இனனிசைச் கச சேரிகளும் திருமலையில் மிகச சிறப் பாக நடைபெறும.

உறசவஙகள எல்லாவறறிலும் பிரமமோற்சவம அதிமுககியமாகவும் ஈடு இணையற்றதாகவும் கருதப்படு கிறது. எனெனில எநத உறசவததிலும அவ்வளவு மக்கள் ஒரே சமயத்தில கூடி பகவானின் அருளைப் பெறுவதையும், இவ்வளவு விசேஷங களை ஒரே சமயததில் கணடு களிபபதையும காண முடியாது. ஐஹிக சுகஙகளுககு ஆளாகி. மமகார அகங்கையைகளுடன நிறைநத நம உளளத்தைப பெருமானின் தரிசன குண கீாததனஙகளால சுத்தப்படுத்தி நல வழிககுத் திருபபி மறுபிறவி இலலாமல செயவதே இவவித உறசவங்களின குறிக்கோள். நமமிடம உளள ஜோதி நம்மைப பிரிநதிருநதாலும, க்ஷணிக சுகததிலிருந்து நம்மை விடுவித்து மக்களுககு நிலையான ஆனந்தத்தை விளைவிக்கும எமபெருமாளு கிய ஜோதி எனறும் மாருததாகும. அணையாததும் ஆகும்.

★

# ராசி பலன் (1-9-79 முதல் 30-9-79 வரை)

டாக்டர் டி. அர்க்கசோமயாஜி, M.A., Ph.D.,
திருப்பதி.

## மேஷம்

**(அசுவனி, பரணி, கார்த்திகை முதல பாதம முடிய)**

*ராகுவினுல் கவலைகள்; சனியினுல் பண நஷ்டம் அல்லது கருத்து வேறுபாடுகள் அல்லது தன் மக்களிடமிருந்து பிரிவு, குருவினுல பணவரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது வாகன வாய்ப்பு அல்லது மக்கட்பேறு; செவ்வாயினுல் 14-ம் தேதி வரை பிள்ளைகள்மூலம் அல்லது தவருன வழியில் பணம் கிடைக்கப் பெறல் பின்னர் வயிறு சம்பந்தப் பட்ட நோயினுல அவதிபபடல் அல்லது தீயோர் நட்பினுல் கவலைகளுக்குள்ளாதல்; சூரியனுல் 17-ம் தேதி வரை எதிரிகள் அல்லது உடல் நலம் கெடுதல் காரணமாக கவலைக் குள்ளாதல், பிறகு உடல் நலம் கெடல், எதிரிகளை வெறறி கொளல்; சுக்கிரனுல் 12-ம தேதி வரை பெரியோர்களது பாராட்டுதல களுக்குள்ளாதல் அல்லது விருநதினர் வருகை அல்லது பொருள் வரவு அலலது மக்கட்பேறு. பிறகு கருத்து வேறுபாடுகள் அல்லது உடல் நலம் கெடல்; புதனுல் 15-ம தேதி வரை மனைவியுடன் அல்லது பிள்ளையுடன் கருத்து வேறுபாடு. ஆனுல் இறுதியில பதவி உயர்வு அலலது வெறறி.*

## ரிஷபம்

**(கார்த்திகை 2-ம் பாதம் முதல, ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம பாதம முடிய)**

*ராகுவினுல கருத்து வேறுபாடுகள், சனியினுல பணநஷ்டம அலலது நணபாகளுடன அல்லது உறருர் உறவினருடன பிரிவு; செவவாயினுல் 14-ம் தேதி வரை அலுவலகக கவலை, அலலது கருத்து வேறுபாடுகள் அல்லது உடல் நலம கெடுவதால அலலது வீட்டில திருடு போவதால் அலலது எதிரிகளால் கவலைகள். பிறகு தவருன வழியில் அல்லது பிளளைகள் மூலமாக பொருள வரவு, சூரியனுல் உடல் நலம் கெடல் அல்லது எதிரிகள. புதனுல 15-ம் தேதி வரை குடும்பத்தில மகிழசசி ஆனுல் பினனர் மனைவி அல்லது பிளளையுடன் கருதது வேறுபாடு கொளல, சுக்கிரனுல் பண வரவு, புதிய உறவுகள், பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல், நல்ல நண்பர்கள் அல்லது மக்கட்பேறு; குருவினுல் உறவினாகளால் கவலைக் குள்ளாதல்.*

## மிதுனம்

**(மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம 3-ம் பாதம் முடிய)**

*ராகுவினுல் கவலைகள; சனியினுல் பண வரவு, உடல் நலமேன்மை அலலது வாகன வாய்ப்பும்கூட, சுக்கிரனுல் பண வரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள், எதிரிகளை வெற்றி கொளல், நல்ல நண்பாகள், குருவினுல ஏமாற்றங்கள், சூரியனுல் 17-ம தேதி வரை பண வரவு அலலது தன்னிலை உயர்தல் ஆனுல பின்னர் உடல் நலம கெடல்; புதனுல் 15-ம் தேதி வரை புதிய நணபர்கள் ஆனுல் தன்னுடைய தீய நடவடிக்கையினுல் தானே அஞ்சுதல். பினனர் குடும்பத்தில மகிழ்ச்சி; செவவாயினுல் அலுவலகம் சம்பந்தப்பட்ட அல்லது எதிரிகள் காரணமாக அலலது வீட்டில திருடு போவதால் அல்லது உடல் நலம் கெடுவதால் கவலைகளுக்குள் ளாதல்.*

## கடகம்

**(புனா பூசம 4-ம் பாதம் முதல பூசம் ஆயில்யம முடிய)**

*ராகுவினுல சனியினுலும் பண நஷ்டம், குருவினுல் பண வரவு; செவவாயினுல் பண நஷ்டம மற்றும் ஏதாவதொரு வகையில் கவலைககுள் ளாதல, சுக்கிரனுல் பண வரவு அல்லது புதிய ஆடை ஆபரணஙகள் மற்றும மதிபபுயர்தல்; புதனுல் பண வரவும், புதிய நணபாகளும் ஆனுல் மதிப்புக்குறைதல்; சூரியனுல் 17-ம் தேதி வரை பண நஷ்டம அல்லது கண் சம்பநதப்பட்ட நோயினுல் அவதியுறல் அல்லது ஏமாற்றப்படல். ஆனுல பின்னா பண வரவு அல்லது தன்னிலை உயாதல.*

## சிம்மம்

**(மகம், பூரம், உத்திரம முதல பாதம முடிய)**

*ராகுவினுல் கவலை; சனியினுல் உற்ருா உறவினருடன் பிரிவு அல்லது பிரயாணம் அல்லது பண நஷ்டம் அல்லது பிளளைகளுடன் கருத்து வேறுபாடுகள், குருவினுல் பண நஷ்டம அல்லது கருத்து வேறுபாடுகள; சுக்கிரனுல் 12-ம தேதி வரை கேளிக்கைகளில் ஈடுபடல், மன மகிழ்ச்சி. பின்னர் பண வரவு அல்லது புதிய ஆடை அபரணஙகள் அலலது மதிப்புயர்தல்; புதனுல் 15-ம தேதி வரை தீய எண்ணம் கொண்ட நணபர்களின காரணமாக சச்சரவுகளுக்குள்ளாவதால் பண நஷ்டம். பிறகு பணம் கிடைக்கப பெற்ருலும் மதிப்புக் குறைதல்; செவ்வாயினுல் 14-ம் தேதி வரை மிகுதியான அளவில் பொருள் வரவு ஆனுல் பினனா பண நஷ்டம்; சூரியனுல் 17-ம தேதி வரை பணநஷ்டம் அல்லது பிரயாணம் அல்லது வயிறு சம்பநதப்பட்ட நோயினுல் அவதியுறல. பின்னர் பண நஷ்டம் அல்லது கண் நோயினுல் அவதிப்படல் அல்லது ஏமாற்றப்படல்*

## கன்னி

**(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம, சித்திரை 2-ம் பாதம் முடிய)**

*ராகுவினுல் பண நஷ்டம்; சனியினுல் கவலைகள்; குருவினுல் பிரயாணமும், உடல் நலம கெடலும்; சுககிரனுல் 12-ம் தேதி வரை எந்த வித நன்மை தீமையும ஏற்படாது. ஆனுல் பினனர் கேளிக்கைகளில் ஈடுபடல், குடுமபத்தில்மகிழ்ச்சி; புதனுல் 15-ம் தேதி வரை எதிரிகள் அல்லது மதிப்புக்குறைதல் அலலது உடல நலம் கெடுதல். பின்னர் தவருன ஆலோசனையைக் கேட்டதன் பேரில் ஏற்படும கருத்து வேறுபாடுகளினுல் பண நஷ்டம்; செவ்வாயினுல் பண வரவு, எல்லா வகையிலும் வெற்றி; சூரியனுல் 17-ம் தேதி வரை பண*

நஷ்டம் அல்லது வயிறு சம்பந்தப் பட்ட தொந்தரவுகளுக்குள்ளாதல் அலலது பிரயாணம்.

### துலா

**(சித்திரை 3-ம்பாதம் முதல், ஸ்வாதி, விசாகம 3-ம் பாதம் முடிய)**

ராகுவினுல் மகிழ்சசி; ஆனுல் சனி யினுல் கவலைகள்; குருவினுல் அதிக அளவில் பணவரவு; சுககிரனுல் 12-ம் தேதிவரை பணவரவு நலலநணபர்கள் பின்னர் புதிய ஆடை ஆபரணங்கள்; புதனுல 15-ம தேதிவரை பணவரவு, நணபர்கள், மகிழ்ச்சி வாகனவாய்ப்பு அல்லது மக்கட்பேறுகூட. ஆனுல் பின்னர் உடல்நலம் கெடல் அல்லது மதிப்புக் குறைதல்; செவவாயினுல் 14-ம் தேதிவரை மதிப்புக் குறைதல் அல்லது பண நஷ்டம். ஆனுல் பின் னர் பெருத்த அளவில் பணவரவு; சூரியனுல 17-ம் தேதிவரை பண வரவு, வெறறி, உடலநலமேன்மை ஆனுல் பின்னர் எநதவித நன்மை தீமையும ஏற்படாது.

### விருச்சிகம்

**(விசாகம 4-ம் பாதம முதல், அனுஷம் கேட்டை முடிய)**

ராகுவினுல் கருத்துவேறுபாடுகள்; சனியினுலும், குருவினுலும, செவ் வாயினுலும் பண நஷடம் அல்லது மதிப்புக் குறைதல்; எனினும் புதனுல் பணவரவு. வெற்றி, கேளிககை களில் ஈடுபடல், நணபர்கள், ஒரு வாகன வாயபபு அல்லது ஒரு புதிய வீடுவாய்ப்பு; சுக்கிரனுல் 12-ம் தேதி வரை கருதது வேறுபாடுகள் அல்லது மதிப்புக் குறைதல, ஆனுல் பினனா நலல நண்பாகள், பணவரவு, சூரிய னுல் மாதம முழுவதும நன்மை பயப் பதால் பணவரவு; வெறறி.

### தனுசு

**(மூலம், பூராடம், உத்திராடம் முதல பாதம் முடிய)**

ராகுவினுல் தீயநடவடிக்கைகளில ஈடுபடுதல்; சனியினுல் கருத்து வேறு பாடுகள் அல்லது உடல்நலம கெடல் அல்லது தீயோர் நட்பு; குருவினுல் பணவரவு, வெற்றி, மககட்பேறும் கூட; செவவாயினுல் மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை அல்லது வயிறு அலலது கண் சமபந்தபட்ட தொநத ரவுகளினுல் அவதியுறல், பணநஷ்டம் அல்லது மதிபபுக் கெடல். சூரிய னுல் 17-ம தேதி வரை பண நஷ்டம் அல்லது மதிப்புக்கெடல், ஆனுல் பின் னா பணவரவு; எல்லாவகையிலும வெற்றி. சுக்கிரனுல் 12ம் தேதிவரை பணவரவு, அல்லது புதிய ஆடை ஆப ரணங்கள அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது நல்லோா நட்பு. ஆனுல் பினனர்கருத்துவேறுபாடுகள் அலலது மதிப்பிழததல்; புதனுல் 15-ம் தேதிவரை ஏமாற்றங்களுக உரிய முயறசிகளில் ஈடுபடுதல். ஆனுல் பின்னர் பணவரவு. வெற்றி அல்லது புதிய வீடுவாயப்பு.

### மகரம்

**(உததிராடம் 2-ம பாதம முதல திருவோணம, அவிட்டம 2-ம் பாதம முடிய)**

ராகுவினுல் கவலைகள; சனியினுல் உறறார் உறவினருடன் பிரிவு, குரு வினுல் உடல் நலம் கெடல அல்லது பிரயாணம்; செவவாயினுல் 14-ம் தேதிவரை பணவரவு, வெற்றிஆனுல் பின்னர் மனைவிககு மன மகிழச்சி யின்மை அலலது கண அல்லது வயிறு சமபநதப்பட்ட நோயினுல் அவதி யுறல, சுககிரனுல் பணவரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள அலலது கேளிககைகளில ஈடுபடல அல்லது ஒரு புதிய வீடுவாய்ப்பு, நலலோர் சேர்க்கை; சூரியனுல் உடல் நலம் கெடல் அல்லது மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை அல்லது பண நஷ்டம அல்லது மதிப்புக கெடல், முயற்சிகளில ஏமாற்றங்கள்; புதனுல் 15-ம தேதிவரை பணவரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது மக்கட்பேறு. ஆனுல் பின்னர் ஏமாற் றங்கள்.

### கும்பம்

**(அவிட்டம் 3-ம பாதம் முதல், சதையம, பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)**

ராகுவினுல் கருத்துவேறுபாடுகள்; சனியினுல பிரயாணம; குருவினுல பணவரவு அல்லது கேளிககைகளில் ஈடுபடல; செவவாயினுல 14ம தேதி வரை உடலநலம் கெடல் அல்லது எதிரிகளுக்கு அஞசுதல் அல்லது குழந்தைகள் காரணமாக கவலைகளுக குள்ளாதல். ஆனுல் பினனர் பண வரவு, வெற்றி; சூரியனுல் 17-ம தேதி வரை பிரயாணம் அலலது வயிறு சம்பநதப்பட்ட நோயினுல் அவதியுறல். பின்னர் உடல் நலம் கெடல் அல்லது மனைவிக்கு மன மகிழ்சசியினமை, சுககிரனுல் 12-ம் தேதிவரை பெணகளினுல துன்பங் களுக்குளளாதல். ஆனுல் பினனா பணவரவு அலலது கேளிக்கைகளில் ஈடுபடல் அலலது ஒரு வீடுவாய்ப்பு, புதனுல் 15-ம் தேதிவரை கருத்து வேறுபாடுகள் ஆனுல் பினனர் பண வரவு, வெறறி அலலது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது மக்கட்பேறு.

### மீனம்

**(பூரட்டாதி 4-ம பாதம் முதல, உத்தி ரட்டாதி, ரேவதி முடிய)**

ராகுவினுல் பணவரவு; சனியினுல உடலநல மேனமை வெற்றி, குருவி னுல மனயமைதி பறிபோதல, செவ் வாயினுல் உடல்நலம கெடல் அலலது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல அல்லது தீய நட்புறவி னுல கவலைககுள்ளாதல; அலலது எதிரிகள அல்லது குழந்தைகள; சுக்கிரனுல் மதிப்புககெடல் அலலது உடல்நலம் கெடல் பின்னா பெண களின் காரணமாக துன்பங்களுககுள ளாதல; சூரியனுல் 17-ம் தேதிவரை உடலநல மேனமை, வெறறி, பிரயா ணம்; புதனுல் 15-ம் தேதிவரை வெற்றி அல்லது தன்னிலை உயாதல ஆனுல் பின்னர் கருத்து வேறுபாடு கள்.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER. T. T. D. PRESS, TIRUPATI-517501.

வகைகளும, சந்தனம, குங்குமப்பூ, பச்சைக கறபூரம, புனுகுதைலம் முதலான உபகார பொருட களும கொணரப்பட்டு, அவற்றில ஒன்றினை தி. தி. தேவஸதான செயலாடசித் தலைவா தன் சிரஸின மேல்வைத்துக் கொளள, விசேஷமாக தாயாரிககப படட 18 ஜான கோயில குடையினை பக்தர்கள் தாங்கிவர, மேற்படி திருவீதிவலம் வெடி முழககங களோடும, வேத கோஷங்களுடனும் ஆலய மாட வீதிகளை வலம வநதது. பிறகு கோயிலமுன், செயலாடசித் தலைவருக்கு பூாண கும்ப மரியாதை அளிக்கபபட்டதைத் தொடர்நது, பூலங்கி அலஙகாரம செயயப்பெற்ற ஸ்ரீ அததிகிரி அருளாள னுக்குத், திருப்பதி வஸ்தரங்கள் அணிவிக்கப்பட்டன. அதுபோது எழுநத 'கோவிந்த நாம கோவும' விணணை முட்டியது. பிறகு கோயில் நூற்றுககால் மணடபத்தில், செயலாடசித் தலைவா திரு. பி. வி. ஆர்.கே. பிரஸாத் அவர்களுக்கு ஸ்ரீ வரதராஜ சுவாமி கோயில தர்மகர்த்தா திரு. ஆர். டி. தாத்தா சாரி யாா அவாகள் வாழ்த்துச் செயதி வாசித்த, பின்னா அவருக்கு பொன்னுடைப போாத்தி கோயில் பிர ஸாதங்கள் வழங்கப்படடன. மேலும் உடன் இருநத







மறறைய தேவஸ்தான உயா அலுவலாகளுககும கோயில் சார்பில மரியாதை அளிக்கபபடடன. பாராட்டுதல்களுக்கு நன்றி கூறி உரையாற்றிய சமயத்து, தி. தி. தே. செயலாடசித தலைவரவாகள, விரைவில் காஞ்சியில தி. தி. தே தகவலறிவிப்பு நிலையம ஒனறும், இலவச சத்திரம் ஒனறும அமைகக ஆவன செய்வதாக உறுதி அளிததார், கோயிலின் மற்றைய கடவுளா மூலஸ்தானஙகளுககு செய லாடசித் தலைவர், உதவி ஆணையா ஸ்ரீ சுப்ரமணயம் அவர்களால் அழைத்துச் செல்லபபட்டு, கோயில் மரியாதைகளை ஏற்றுககொணடாா. பின்னா ஸ்ரீவரத ராஜ சுவாமி கோயிலின் இரணடு குடைகள தி. தி. தேவஸ்தானத்திற்கு அன்பளிப்பாக வழங்கப் பட்டதைத் தொடாந்து, ஸன்னதி வீதியில் தி. தி. தே. செயலாட்சித் தலைவரவர்களுக்குச சிறப்பான முறையில் வழியனுப்பு விழா நடந்தது.

தகவல்:

**எஸ். என். விஜயராகவாச்சாரி,**

திருப்பதி.

